# மதுரை

# ஸ்ரீ இம்மையிலும் நன்மைதருவார்

# கோயில்



# மகா கும்பாபிஷேக மலர்



இம்மையில் நன்மை தருவார் விமானம்

உ

# மதுரை
# ஸ்ரீ இம்மையிலும் நன்மை தருவார்
# கோயில்

*

# மகா கும்பாபிஷேக மலர்

17—6—1963.

*



வெளியீடு:

சிவகெங்கை சமஸ்தான தேவஸ்தானம்.

# உள்ளுறை


| | | |
|---|---|---|
| ஆசியுரை | ஸ்ரீ மத் சங்கராசாரிய சுவாமிகள் | |
| திருப்பணியாளர் சிறப்பொடு வாழ்க | மீ. இராமநாதன் | |
| முன்னுரை | | 1 |
| அணிந்துரை | M. S, சாரங்கபாணிமுதலியார் B.A.,B.L. | 3 |
| நன்மைதரும் நற்கோயில் | வித்வான் நீ.சி. சுந்தரராமன் | 5 |
| பஞ்சாக்ஷரதரிசனம் | பெ. கா. ஷண்முகநாதன் B.A.,B.L. | 9 |
| பிள்ளையார் பெருமை | என். எஸ். தாத்தாச்சாரி | 22 |
| தொண்டர்தம் ஆண்மையும் வளவனூர் பெருமையும் | N. சுப்பையாபிள்ளை M.A., | 28 |
| விட்டேனுபார்! | வித்துவான் P.S.தட்சிணுமூர்த்தி பிள்ளை | 33 |
| அருளைவேண்டிப் பொருளைப் பெருக | M. பரமசிவன் M.A.LL.B. | 38 |
| இசைமறையோன் | லெ. இராமநாதன் M.A , | 45 |
| இறையுணர்வு | கவி M பிரம்மாநந்தா | 51 |
| பக்திநெறியும் சக்திஒளியும் | ஜோதி நாதவளயாபதி சித்தர் | 61 |
| நன்மைதருவாரும் தீமை தருவாரும் | வித்துவான் தா. குருசாமி | 66 |
| நன்மைதருவார் கோயில் திருப்புகழ் | கவி ஆறுமுகனுர் | 71 |
| கும்பாபிஷேக இரதபந்தம் | கவி பிரம்மாநந்தர் | 72 |
| மணிவாசகர் | M, R. யாழ்கீத சுந்தரம்பிள்ளை | 74 |
| பிறவிவேண்டுவதே | வித்துவான் R.பஞ்சநதம்பிள்ளை | 78 |
| மதுரைநகர் காக்கும் அருட் சக்திகள் | நா. பத்மநாபன் | 80 |

உ

# ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி
# ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள் ஸ்ரீமடம்
## காஞ்சிபுரம்.

---

முகாம் *இராமேச்வரம்*

தேதி *23—5—1963*

அரிதான மனிதப் பிறவியை அடைந்த நாம் கடவுளின் அருளையும் அடைந்து நல்ல வாழ்க்கை வாழவேண்டும். மதுரை என்றாலே ஸ்ரீ சொக்கனாதரின் திருவிளையாடல்கள் தான் நமது நினைவிற்குவரும். அடியார்களை பலவித கோலங்களில் வந்து ஆட்கொண்டு இம்மையிலும் மறுமையிலும் நன்மையை அளித்துக்கொண்டு அருள் பாலித்து வரும் இம்மையிலும் நன்மை தருவாரின் அருளுக்கு நாம் எல்லோரும் பாத்திரமாவோம்.

# திருப்பணியாளர் சிறப்பொடு வாழ்க!

இயலிசைப்புலவர், மீ. இராமநாதன், மிதிலைப்பட்டி.

நிலைமண்டில ஆசிரியப்பா.

உலகின ருய்ய உயர்தமிழ்க் கூடலில்
நிலைபெறு பலவிளை யாடல் நிகழ்த்திச்
செங்கோல் பூண்டு தென்னகம் செழிக்க
அங்கயற் கண்ணி அன்னையோ டைமுகன்
ஆளும் போதினில் அரசரின் முறைபோல்
நாளும் இலிங்க பூசை ந டாத்தத்
தம்மனத் தெண்ணித் தாபித் தருளிய
இம்மையில் நன்மை தருவார் என்னும்
நாதனும் நடுவூர் நாயகி அம்மையும்
காதலித் துறையும் கவின்பே ராலய
மேலைக் கோபுரம் விண்ணுற நிமிரவும்
ஆலய விமானம் அழ கொடு மிளிரவும்
பொற்கோ யிலிடம் முழுவதும் புதுக்கி
நற்குட முழுக்கும் யாம்கண் டுய்யப்
புரிவித் துயர்ந்த புண்ணியர் யாரென்
றறிவிக் கின்றோம் அன்பொடு கேண்மின்,
பரம்பரைத் தர்மகர்த் தாவெனும் பணியை
நிரந்தரம் செய்சிவ கங்கையின் நிருபர்
தேவத் தானம் சிறப்புறச் செயல்செய்
காவற் பகுதிக் கனம் பக்த் வத்சலம்
கமிஷனர் சாரங்க பாணிக் கண்ணியன்
அமையும் அன்னவற் கடுத்துள சக்கரை
இத்தகு அன்பரோ டிணைந்துநற் காரியம்
சித்தமு வந்துசெய் செயரா மையர்
ஆவரன் னவரோ டரும்பொருள் நல்கித்
தேவகா ரியம்செய் சிறந்திடு அன்பரும்
வாழிய வாழி மாநிலம் புகழ
ஊழி பலவே உயர்ந்துமண் மீதே!



லேட் ராஜா D. ஷண்முக ராஜா அவர்கள்,
சிவகெங்கை ராஜா & தேவஸ்தானம் பரம்பரை டிரஸ்டி
(15—6—41 To 11—3—63)



தமிழ்நாடு அறநிலையத்துறை
அமைச்சர்
கனம். M. பக்தவத்சலம், B.A., B.L.,

# ஆசிச் செய்தி

திருமிகு. எம். பக்தவத்சலம் அவர்கள், பி.ஏ., பி.எல்.,
அறநிலையத்துறை அமைச்சர், சென்னை.

சிவகெங்கை தேவஸ்தானத்தைச் சேர்ந்ததும், மதுரையில் உள்ளதும் ஆகிய ஸ்ரீ நன்மை தருவார் கோயிலின் விமானங்கள் புதுப்பித்து வண்ணம் தீட்டப்பெற்று 17-6-63 அன்று அஷ்டபந்தன மகா கும்பாபிஷேகம் நடைபெற இருப்பது அறிந்து மிகவும் மகிழ்ச்சியுறுகின்றேன்.

கும்பாபிஷேகம் நடைபெற இருக்கும் கோயிலின் சுவாமி பெயர் நன்மை தருவார் என்று அமைந்திருப்பதை நினைக்குந்தோறும், உள்ளத்தில் நமக்கு ஒருவகை இன்ப உணர்ச்சி பொங்கி எழுகின்றது.

நம் இந்து மதத்தைக் குறைகூறுபவர்கள், இந்துமதம் மருள்நோக்கு (Pessimism) உடையது என்றும், இவ்வுலக வாழ்வியலுக்கு மாறுபட்டு நின்று மறுமையுலக வாழ்வையே பெரிதும் வற்புறுத்திக்கொண்டிருப்பது (Unworldly and other wordly) என்றும் குறிப்பிடுவதுண்டு. மேலும் உலகத்தில் ஒரு சில சமயங்கள் கடவுளை நாம் செய்யும் குற்றம் குறைகளுக்காகவும் பாவங்களுக்காகவும் "தண்டனை தருபவர்" என்ற முறையிலேயே பெரிதும் வருணிப்பது வழக்கம்.

அங்ஙனமெல்லாம் இல்லாமல் கடவுள் கருணையே வடிவமாக உடையவராக விளங்குகின்றார். அவர் நமக்கு நன்மையே தருவார். அவர் அருளால் நாம் "மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம். வைகலும் எண்ணில் நல்ல கதிக்கு யாதும் ஓர் குறைவிலை" அவர்தம் திருவருள் நமக்கு "இம்மையே தரும் சோறும் கூறையும் ஏத்தலாம் இடர்கெடலுமாம்" என்பன போன்ற சிறந்த உண்மைகளை யுணர்த்தி, நாம் வையத்து வாழ்வாங்கு வாழ்வதற்கு வேண்டிய நம்பிக்கையை யுண்டாக்கும் வகையில், நன்மை தருவார் என்று சுவாமியின் பெயர் வழங்கி வருவது, மிகவும் போற்றத்தகுந்தது. இந்து மதம் தெருள் நோக்கு (optimism) உடையதே என்றும், "வாழ்க்கை வாழ்வதற்கே" என்னும் குறிக்கோளைத் தழுவியே இந்து மதம் இனிது விளங்கி வருகிறது என்றும் இதனால் நாம் உணரப்பெறுகின்றோம்.

இறைவன் தம்மை அன்புடன் வழிபடும் அடியார்களுக்கு எல்லாவகை யான நன்மைகளையும் தருகின்றூர். இறைவனை அன்புடன் வழிபட்டால் எல்லா வகையான நன்மைகளையும் நாம் எய்துதல் திண்ணம் என்பதனைப் பின்வரும் திருவிசைப்பா பாடலிற் கருவூர்த் தேவர் கசிந்துருகிப் பாடித் தெளிவிக் கின்றூர் :

“ அற்புதத் தெய்வம் இதனில்மற் றுண்டே
அன்பொடு தன்னை அஞ் செழுத்தின்
சொற்பதத் துள்வைத் துள்ளம் அள் ளூறும்
தொண்டருக் கெண் திசைக் கனகம்
பற்பதக் குவையும் பைம்பொன்மா ளிகையும்
பவளவா யவர்பணை முலையும்
கற்பகப் பொழிலும் முழுதுமாங் கங்கை
கொண்டசோ ளேச்சுரத் தானே ”

கும்பாபிஷேகம் குறித்த முறைப்படி சிறப்புற நன்கினிது நடைபெறுவ தாக எனவும், கும்பாபிஷேகம் கொண்டருளும் எல்லாம் வல்ல இறைவன் திருவருள் உலக மக்கள் அனைவருக்கும் பலவகை நன்மைகளையும் தருவதாக எனவும் விரும்பி வாழ்த்தி வணங்கி மகிழ்கின்றேன்.

---

உ

சிவமயம்

# அணிந்துரை

செம்மலர் நோன்றாள் சேரல் ஒட்டா
அம்மலம் கழீஇ அன்பரொடு மரீஇ
மால்அற நேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயந் தானும் அரன்எனத் தொழுமே.

இது மெய்கண்டதேவர் அருளிய சிவஞானபோதம் பன்னிரண்டாஞ் சூத்திரம். மெய்த்தவமுடைய சிவனடியாரையும், முதல்வன் அருள்கோலங் கொண்டு நின்றருளும் ஆலயத்தையும், அரனாகவே மதித்துத் தொழுதல் சீவன் முத்தர் செயல் என்பது இதன் பொருள். எனவே ஆலய வழிபாட்டின் இன்றியமையாமை இதனாற் பெறலாயிற்று.

ஆலயத்தில் உறைபவன் எத்தகையன் என்பது ஐயப்பாட்டிற்கிடமின்றி விளக்கப்பட்டிருக்கிறது. "**நன்றுடையான்**" தீயதில்லான், நரைவெள்ளே றொன்றுடையான், உமையொரு பாகமுடையான் என்பது திருமுறை. எனவே இறைவன் நன்மையே உருவானவன், நன்றே புரிபவன் என்றாயிற்று. பசுக்களாகிய ஆன்மகோடிகள் பாசநீக்கம் பெறுதற்குச் சாதனமாக எஞ்ஞான்றும் ஐந்தொழிலைப் புரிபவன் ஆண்டவனாதலின் 'நன்றுடையான்" என்பது முற்றிலும் பொருந்துவதாகும். ஆக இக்கருத்தை மக்கள் நன்குணரும்பொருட்டு இறைவன் அர்ச்சைவடிவிலும் "நன்மை தருவார்" என்ற பெயருடன் மதுரையில் காட்சியளிக்கின்றான். இவ்வாலயம் "நன்மை தருவார் கோயில்" எனப்படுகிறது. இது விரைவில் திருப்பணி செய்யப்பட்டு குடமுழுக்குப் பெறும் நிலையில் உள்ளது. சிவகங்கை சமஸ்தானத்தார் இப்புனிதத் திருப்பணியை நிறைவு செய்திருக்கின்றனர். அவர்களுக்கு ஆஸ்திக மக்கள் பெரிதும் கடப்பாடுடையர். செவ்வனே திருப்பணியைச் செய்து முடித்தமையின் அவர்களை நான் மனமாரப் பாராட்டுகிறேன். இப்பெரும் பணி இனிது நிறைவேறத் தோன்றாத் துணையாய் நின்று அருள் பாலித்த மலைமகள் மணாளனைப் பணிந்து புகழ்ந்து வந்திக்கின்றேன்.

வாழ்க திருக்கோயில் திருப்பணி !

வளர்க சைவம் !

(தங்கல்)
மதுரை
14—6—63

இப்படிக்கு,
**மா. சே. சாரங்கபாணி**
அறநிலையத்துறை ஆணையர்.

உ

# பாராட்டுரை

பரம்பரையாகச் சிவதருமங்களைச் செய்வதிலும், சிவாலய பரிபாலனம் செய்வதிலும் சிறப்புடையவர்கள் சிவகெங்கை சமஸ்தானத்தார். அவர்களின் நிர்வாகத்தில் விளங்குவது மதுரை ஸ்ரீ இம்மையிலும் நன்மைதருவார் கோயில். இறைவனே சுந்தரபாண்டியராக மதுரையை ஆண்டபொழுது அரசர்களுக்கு வழிகாட்டியாக சிவவழிபாடு செய்து காட்ட அமைத்த பழமையும், பெருமையும் உடையகோயில் இதுவாகும். இக்கோயிலில் விளங்கும் பெருமானின் திருப்பெயரைக் கேட்கும்போதே இப்பெருமானை வழி படுவதால் நன்மையெல்லாம் பெறலாம் என்பதை உறுதிசெய்துகொள்கிறோம்.

மதுரை நாயகராகிய சோமசுந்தரப்பெருமானால் பூஜிக்கப்பட்ட இக்கோயிலிற்கு மதுரைக்கோயில் கும்பாபிஷேகம் நிகழ்வதற்கு முன்பு கும்பாபிஷேகம் நிகழ்வது மிகவும் பொருத்தமே. கோயில் என்றாலே நம் மனதில் முதலில் தோன்றுவது கோபுரமே, அவ்வகையில் இக்கோயிலில் கோபுரம் அமைக்கப்படாத குறையை நீக்கிப்புதிய கோபுரம் ஒன்றை அமைத்து விமானங்களையும் புதுப்பித்துத் திருப்பணி செய்து கும்பாபிஷேகம் செய்வது பாராட்டற்குரியது.

கோயில் வழிபாட்டு முறைகளிலும், சமய வாழ்வு நெறிகளிலும் மக்கள் பயிலவேண்டு மென்ற வகையில் இக்கும்பாபிஷேக விழாவையொட்டி மலர் ஒன்று வெளியிடுவது சீரிய தொண்டாகும். மலரில் நல்ல பல கட்டுரைகள் விளங்குகின்றன.

நல்ல பல பணிகளைச் செய்யும் சிவகெங்கை சமஸ்தானத்தாரின் பணி பாராட்டற்குரியதாகும்.

மதுரை
15—6—63

**அ. சக்கரை**

அறநிலையத்துறை துணை ஆணையர்.



திரு. A. சக்கரை B.A., B.L.,

அறநிலையத்துறை துணை ஆணையர்.



ம. சூரியராஜ், பி.ஏ., பி.எல்., உதவி ஆணையாளர்,
இந்துமத அறநிலைய ஆட்சித்துறை, மதுரை.

உ

# 'திருக்கோயிலும் திருத்தொண்டும்'

ம. சூரியராஜ், பி.ஏ., பி.எல்.,

உதவி ஆணையாளர், இந்துமத அறநிலைய ஆட்சித்துறை, மதுரை.

---

"கோயிலில்லா ஊரில் குடியிருக்கவேண்டாம்" என்பது முதுமொழி. எத்திக்கு திரும்பினும் எந்த வீதி சென்றாலும் கோயில்களால் நிரம்பப்பட்டு கோயில் நகரம் எனத்திகழும் ஆலவாய் எனப்பட்ட மதுரையம்பதியில் வாழும் பேறுபெற்றவர்கள் முதுமொழி வழிவந்த மாந்தர்கள் மட்டுமன்றி அவர்கள் பூர்வ புண்ணியம் பெற்றவர்கள் என்றும் கொள்ளலாம். அப்படிப்பட்ட இந்நகரில் பல கோயில்கள் இருப்பினும் அவைகளில் எல்லாம் பழமையானதும் பெருமை படைத்ததுமானது இம்மையிலும் நன்மைதருவார் கோயில். அதன் வரலாறு பழமையானது மட்டுமின்றி புனிதமானதும் கூட. தன்னைத்தானே பூஜித்தல் என்னும் நியதிக்கேற்ப ஈஸ்வரனே ஸ்ரீ மீனாட்சி சமேத சோமசுந்தரராக லிங்கத்தை வழிபட்டுள்ள பெருமை கொண்டது இவ்வாலயம்.

சமீபகாலமாக நம் தமிழ்நாட்டில் பல பெரியார்கள் செய்த தவப்பயனாலும் அவர்கள் வழிவந்த பெரியார்கள் பெருமுயற்சியாலும் எங்கே பார்த்தாலும் கோயில்கள் தோறும் திருப்பணிகளும் கும்பாபிஷேகங்களும் சிறப்புற நடைபெற்று வருவது நம் அனைவரின் பாக்கியம் என்றே சொல்லவேண்டும். அதே போல் மதுரையில் உள்ள திருக்கோயில்கள் அனைத்தும் இன்று புதுமை ஒளி பெற்று ஆலவாய் நகரை பின்னும் அழகுறச்செய்வது கண்டு உள மகிழாதார் இருக்கமுடியாது. அதே முறையில் இத்திருக்கோயில் நிர்வாகத்தினரும் பெருமுயற்சி கொண்டு அழகு குன்றியிருந்த முகப்பிற்கு கோபுரமும் கட்டுவித்து திருப்பணிசெய்து மகா கும்பாபிஷேகமும் செய்வித்தல் பாராட்டுக்குரிய செயலாகும். அவர்கட்கு அத்தகைய பேறு கிடைத்தமை அவர்களும் அவர்கள் முன்னோரும் செய்த நல்வினை என்றே கூறலாம்.

இவ்வாறு திருப்பணி செய்யப்பட்ட கோயில்களின் சானித்யத்தையும், புனிதத் தன்மையையும் அழகு குன்றாமல் நல்முறையில் பாதுகாத்தும் அவற்றை சிறப்புறும் முறையில் பயன்படுத்தலும் வழிபடும் நம்மவர் யாவருடைய பொறுப்பென்று கூறுதல் மிகையன்று. திருப்பணி செய்வது எவ்வளவு புனிதமானதோ அதற்கும் மேலான புண்ணிய முள்ளது அதனைப் பேணிக்காத்து பயனுள்ள தாக்குதல். பொருள்படைத்தோர் பொருளுதவி புண்ணியம் தேடியபோதிலும்

தாங்களும் திருப்பணிகளில் ஈடுபடும் பாக்கியம் கிடைக்கவேண்டுமாயின் அதனை நிறைவேற்றும் வாய்ப்பு ஆலயங்கள் செல்லும் தோறும் அவைகளை பாது காக்க உறுதுணையாக இருக்கவும் எப்பொழுதும் அதனை சுத்தமாக வைத்துக் கொள்ள நிர்வாகத்தினருடன் ஒத்துழைத்து அங்கே புனிதத்தன்மை குறையா மல் இருக்கும் முறையில் நடந்துகொள்வதுமே யாகும்.

அன்று அப்பர் சுவாமிகள் உழவாரப்பணி செய்தார். இன்று கோயில் கள் தோறும் உழவாரப்பணிக்கென்றே சிப்பந்திகள் நியமிக்கப்பட்டுள்ளனர். நாம் அப்பர் சுவாமிகள் போல் உழவாரத்திருப்பணி செய்யாவிட்டாலும் அதற் கென்று ஏற்பட்டுள்ள சிப்பந்திகளின் வேலையைக் குறைக்குமாறு கோயிலுக்குள் அசுத்தம் செய்யாமலிருந்தாலே ஒரு சிறந்த தொண்டாகும்.

அதேபோன்று கோயில்களில் சென்று நம் வீட்டு ஊர்விவகாரங்களை யெல்லாம் பேசி தாங்களும் மனதை ஒரு நிலைக்கொண்டு தரிசனம் செய்யாமல் பிறருக்கும் இடைஞ்சல் செய்வது கோயிலுக்கு செய்யும் தொண்டாகாது. நாம் அங்கே அமைதியுடனும் பயபக்தியுடனும் சென்று வணங்கி முன்மாதிரி யாக நடந்துகொண்டால் அதுவும் நாம் செய்யக்கூடிய பணிகளில் ஒன்றேயாகும்.

இதேமுறையில் கோயிலில் வேலைசெய்யும் குருக்கள் சிப்பந்திகள் மூலம் தான் கோயிலின் புனிதத்தன்மை பெரிதும் காக்கப்படவேண்டும். அவர்கள் பௌவ்யமாகவும் குறிப்பிட்ட காலங்களில் உரிய ஆசாரங்களுடன் தங்கள் தங்கள் பணிகளை செவ்வனே செய்து முடிப்பார்களானால் அதைவிட சிறந்த தெய்வப்பணி பிறிதொன்று இருக்கமுடியாது.

ஆகவே நாம் கோயில்களை புனருத்தாரணம் செய்து புதுப்பித்துவிட்டால் மட்டும் போதாது. நாள்தோறும் இடைவிடாது செய்துகொண்டிருக்கவேண்டிய பணி நிறைய உள்ளது என்பதை நினைவூட்டுவதற்கு கிடைத்த வாய்ப்பாக இதைக்கொண்டு இக்கோயில் திருப்பணிக்கு காரண கர்த்தர்களாக இருந்த அனைவருக்கும் உளங்கனிந்த பாராட்டுதல்களைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

---

# முன்னுரை

தெய்வ வழிபாடுகள் இயற்றுவதிலும், தர்மச் செயல்கள் புரிவதிலும் பெயர் பெற்ற சிவகெங்கை சமஸ்தானாதிபதிகளின் ஆட்சியின் கீழ் சமஸ்தான எல்லைக்குள் எண்பதுக்கும் மேற்பட்ட கோயில்கள் அமைந்துள்ளன. மேலும் வெளி மாவட்டங்களில் விளங்கும் பல தலங்களில் இருபதுக்கும் மேற்பட்ட கட்டளைகளும் இருந்து வருகின்றன. இந்தக் கோயில்களுக்கும், தர்மக் கட்டளைகளுக்கும் முற்காலத்துப் பாண்டிய மன்னர்களால் ஏராளமான நிலங்கள் இந்த சமஸ்தானத்தில் அளிக்கப்பட்டிருந்தன. அந்நிலங்கள் சிவகெங்கை மன்னர்களாலும், பல ஆண்டுகள் கோர்ட்டாப்வார்ட்ஸ் (court of wards) நிர்வாகத்தாலும், திவான்கள் மூலமாகவும் பரிபாலிக்கப்பட்டு வந்தன. 1948-ம் ஆண்டு ஜமீன் ஒழிப்புச் சட்டப்படியும், 1949-ம் ஆண்டு வரிகுறைப்புச் சட்டப்படியும் மேற்படி இனும் கிராமங்கள் அரசினரால் எடுத்துக்கொள்ளப்பட்டு, அது முதல் அரசினரால் உதவித்தொகை அளித்து வரப்படுகிறது. அவ்வருமானம் பழைய வருமானத்தை விடக் குறைவு.

இருப்பினும் ஜமீன் ஒழிப்பிற்குப் பின்பு ராஜாவின் நிர்வாகத்தில் அறநிலையங்கள் மட்டுமே இருந்து வருவதால் அவைகளின் வளர்ச்சிக்கு அதிக கவனம் செலுத்தப்பட்டு வருகிறது. வருமானம் குறைவாக இருப்பினும் சமஸ்தானத்துக் கோயில்களுக்குத் திருப்பணிகள் செய்வதற்குரிய வகையில் சமஸ்தானக் கோயில்கள் சிலவற்றின் நிதியினைக் கொண்டும், சிவ பக்தியில் உயர்ந்த நகரத்தார்களின் உதவியாலும், இதர பொதுமக்களின் நன்கொடையாலும் திருப்பணிகள் செய்யப் பெற்றுக் கும்பாபிஷேகங்கள் நடைபெற்றுள்ளன.

அண்மையில் பாடல் பெற்ற ஸ்தலமான காளையார் கோயில் கோபுரங்கள் தேவகோட்டை திரு. P. S. S. சோமசுந்தரம் செட்டியார், திரு. தி. ராம. தி. சு தின்னப்ப செட்டியார் இவர்களின் நன்கொடையாலும், திருக்கோஷ்டியூர் கோயில் புதூர் திரு. சௌமியமூர்த்தி தொண்டைமான் நன்கொடை, தேவஸ்தானம் நிதி, அரசினர் உதவித் தொகை ஆகியவற்றாலும், திருப்பூவணம் கோயில் அரசினர் உதவித் தொகை, தேவஸ்தானம் நிதி ஆகியவற்றாலும் திருப்பணிகள் செய்யப் பெற்று கும்பாபிஷேகங்கள் செய்யப்பெற்றுள்ளன. மேலும் கண்டதேவி, சாக்கோட்டை, கல்லாங்குடி, நாட்டரசன்கோட்டை, கல்லல் முதலிய கோயில்களிலும் கும்பாபிஷேகங்கள் செய்யப்பட்டுள்ளன.

மதுரையம்பதியிலுள்ள ஸ்ரீ இம்மையிலும் நன்மை தருவார் கோயில் சிவகெங்கை சமஸ்தானத்தைச் சேர்ந்த தேவஸ்தானங்களில் ஒன்று. இக்கோயில் மிக்க பழமை உடையதும் ஸ்ரீ சோமசுந்தரப்

பெருமானுலேயே அமைக்கப்பெற்றதும் ஆகும். இங்கு விளங்கும் சிவலிங்கப்பெருமானே சோமசுந்தரப்பெருமானே பிரதிஷ்டை செய்துள்ளார் என்றுல் இக்கோயிலின் பெருமையைப்பற்றி வேறு என்ன சொல்ல முடியும். மதுரை மீனுட்சி சுந்தரேசுவரர் கோயிலோடு மிகுந்த தொடர்புடைய இக்கோயில் சுமார் அறுபத்தைந்து ஆண்டுகட்கு முன்பு சிவகெங்கை ராஜாவின் அனுமதி கொண்டு தேவகோட்டை நகரத்தார் இருவரால் திருப்பணி செய்யப்பட்டு கும்பாபிஷேகம் செய்யப்பட்டது. ஆனுல் முழுவதும் திருப்பணி செய்யப்பெறவில்லே. முன் மண்டபங்கள், கோபுரம் ஆகியவை அமைக்கப்படவில்லே.

திருக்கோயிலின் முக்கிய சின்னமான கோபுரம் ஒன்று அமைக்க வேண்டுவது மிகவும் அவசியம் எனக்கருதி மதுரை அறநிலேயத்துறை துணே ஆணேயர் திரு. A. சக்கரை அவர்களின் முயற்சியால் ஆணேயரின் அனுமதிபெற்று தேவஸ்தானம் நிதியிலிருந்து ரூ. 9000 மதிப்பில் ஒரு சிறு கோபுரம் கட்ட ஏற்பாடு செய்யப்பெற்றது. இதற்குள் மதுரை ஸ்ரீ மீனுட்சி சுந்தரேசுவரர் கோயில் திருப்பணி தொடங்கவே சிறப்புடைய இக்கோயிலின் விமானங்களேயும் புதுப்பித்து கும்பாபிஷேகம் செய்வதற்கு ஆணேயரின் அனுமதி பெறப்பட்டது. மதுரைக் கோயில் கோபுர வேலேகளேச் செய்த திரு. மாரியப்ப ஸ்தபதியின் மேற்பார்வையிலேயே மேற்படி கோபுரத்தைக் கட்டியும், விமானங்களேப் புதுப்பித்தும் திருப்பணிகள் செய்யப்பெற்றன. இத்திருப்பணிகள் சுமார் ரூ. 30000ம் செலவில் நிகழ்த்தப்பெற்று சோபகிருது ஆண்டு ஆனி மாதம் 3௳ (17–6—63) ல் அஷ்டபந்தன மகா கும்பாபிஷேகம் இறைவனருள் கொண்டு நடைபெற்றது.

இக்கும்பாபிஷேகத்தின் நிணேவாக இம்மலர் வெளிவருகின்றது. ஆசியுரை அருளிய ஜகத்குரு ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள், மற்றும் அறநிலேயத்துறை அமைச்சர், ஆணேயர், துணே ஆணேயர் ஆகியோருக்கும், கட்டுரைக்ள் வழங்கிய பெருமக்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். இம்மலரை வெளிவரச் செய்வதில் ஊக்கமுடன் உதவிய வித்துவான் திரு. நீ. சி. சுந்தரராமன் அவர்களுக்கும், மலரை நன்முறையில் அச்சிட்டுக் கொடுத்த மதுரை ராஜா பிரஸ் உரிமையாளருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்தக் கோயில் மேலவாயிலில் நல்ல முறையில் கோபுரத்தைக் கட்டியும், விமானங்களேப் புதுப்பித்தவருமான திரு. மாரியப்ப ஸ்தபதியாருக்கும், அவரின் கீழ் வேலே பார்த்த ஸ்தபதிகளுக்கும் என் பாராட்டுதலேத் தெரிவித்துக் கொள்கிறேன்.

"என்கடன் பணி செய்து கிடப்பதே"

இங்ஙனம்,

**S. ஜெயராம அய்யர்,**

தேவஸ்தானம் மானேஜர்.

சிவகெங்கை
17—6—63



திரு S. ஜெயராம ஐயர், B.A., B.L.

சிவகெங்கை தேவஸ்தான மானேஜர்.



புதிதாக அமைக்கப்பெற்ற மேலக்கோபுரம்

# நன்மைதரும் நற்கோயில்

வித்துவான் நீ. சி. சுந்தரராமன்,
தமிழாசிரியர், ஆயிரவைசிய மஞ்சப்புத்தூர் மகாசன உயர்பள்ளி, மதுரை.

**மாண்புமிகு மதுரை**

எத்தலத்தினும் மிக்க புகழ்கொண்டோங்குவது மதுரைமா நகரம். இத் தலம் பல்லாற்றானும் பெருமையுற்றது. மூர்த்தி, தீர்த்தம், தலம் ஆகிய மூன்றினும் சிறந்த இந்நீடு புகழ் மாட மதுரை துவாத சாந்தத் தலமாக விளங்குவது. உலகமே விராட் என்னும் மனிதனின் உடலாகும். அவ்வுடலில் இருதயத்தான மாக விளங்குவது தில்லை. அதனினும் மேலான துவாத சாந்த நிலையாக (தலையின் மேல் பன்னிரண்டு அங்குல உயரத்தில் உற்ற நிலை) அமைந்த தலம் இது. இத்தலத்தில் உறை சோமசுந்தரன் போல் இகபர நன்மை அருளவல்ல கருணைத் தெய்வம் காசினியில் இல்லை என்று பரஞ்சோதி முனிவர் பாராட்டுகிறார். "அண்ணல் ஆலவாய் நண்ணினான்றனை எண்ணியே தொழத் திண்ணம் இன்பமே" என்று தேவாரம் முழங்குகின்றது. "மதி மலிபுரிசைமாடக்கூடல் பதிமிசை மன்னிபசிவன் யான்" என்று சிவபெருமானே தாம் என்றும் நீங்காது விளங்கி அருளும் இடம் மதுரையே என்று திருமுகப்பாசுரத்திலே கூறுகிறார். இத்தகைய மதுரை வரலாற்றிலும், இலக்கியத்திலும் மிக்க சிறப்பினைப்பெற்றுள்ளது. பாண்டியர் தம் தலைநகராகப் பாங்குடன் விளங்கியது. முத்தமிழ்ச் சங்கம் கண்ட முதன்மையுடையது. தண்டமிழ் மதுரம் கூட்டுணவெழுந்த வேட்கையால் சிவபெருமானும், உமையம்மையாரும், முருகனும் பாண்டிய அரசாட்சியினை ஏற்றருளிய தலம் இது.

**அன்னை மீனாட்சி**

மலயத்துவசன் பெற்ற பெரும்பேற்றால் அன்னை பராசக்தியே தடாதகை எனப் பெயர்கொண்டு இம்மதுரை மண்ணிலே பாண்டியர் குலக்கொடியாக அவதரித்தாள். உதித்த பரம்பரைக்கேற்ப முடிசூடி மூவேந்தரின் மேம்பட்ட நிலையில் யாவரையும் வெற்றிகொண்டு திக்குவிஜயமும் புரிகிறாள். கயிலாயம் சென்று கண்ணுதற் கடவுளாகிய சிவபரம்பொருளோடும் போரிட முனைகிறாள். அம்முனைப்பிலே நாணமுடையவளாகி நாதனைப்பெறுகிறாள். ஏகநாயகனாகிய இறைவன் மதுரையில் தடாதகைப் பிராட்டியாராகிய அன்னை மீனாட்சியைத் திருமணம்புரிந்து சுந்தரபாண்டியராகிறார். அம்மைக்குப் பின் பாண்டிய அரசாட்சியைக் கதிர்மகுடம் தாங்கி ஆளும் அரசனாகிறார். பெருமான், அந்த

நேரத்திலே அரசர்களின் நிலையிலே தானும் சிவ வழிபாடு செய்யத் திருவுளம் கொண்டு நடுவூர் என்ற திருவூரை நிறுவி அதில் ஆலயம் அமைத்து இம்மையே நன்மை நல்கும் இறைவனைப் பிரதிஷ்டை செய்து வழிபடுகின்றார். தன்னைத்தானே வழிபட்ட நிலை. அன்னை நடுவூர் நாயகி என நாமம் பூண்டு அருள் வழங்குகின்றாள்.

இறைவனே ஸ்தாபித்த இவ்விலிங்கத்தின் பெருமையை அளக்கவல்லார் யார் என்று வியக்கிறார் பரஞ்சோதியார். சுந்தரேசுவரர் சிவவழிபாடு செய்ததனைக் கல்லாடம் "மூலை மூன்று அணைந்த சிலைநுதல் திருவினை அருமறை விதிக்கத் திருமணம் புணர்ந்து, மதிக்குலம் வாய்த்த மன்னவனாகி மேதினி புரக்கும் விதியுடை நன்னாள் நடுவூர் நகர் செய்து அடுபவம் துடைக்கும் அருட்குறி நிறுவி அருச்சனை செய்த தேவர் நாயகன் கூடல் வாழிறை" என்று குறிக்கிறது.

**நன்மை நல்கும் கோயில்**

இக் கோயில் இறைவனால் அமைக்கப்பட்ட சிறப்புடையது. ஆதலின் இங்கே வழிபடுவார் இம்மை மறுமை ஆகியவற்றில் தப்பாது நன்மை பெறுவர், மறுமையிலே மட்டும் இவ்விறைவன் நன்மைதருவதோடன்றி நாம் வேண்டியவாறு இம்மையிலும் நன்மைதரக் காத்திருக்கின்றான்.

**கோயில் அமைப்பும் நிர்வாகமும்**

இக் கோயில் மேலமாசி வீதியின் மேற்கே அமைந்துள்ளது. இக் கோயில் மேற்குப் பார்த்த சந்நிதியுடையது. நன்மைதருவாரின் பின்னே மீனாட்சி சுந்தரரின் திருவுருவம் சிவபூசை செய்கின்ற நிலையில் அமைந்துள்ளது. சிறிய கோயிலாக இருந்தாலும் கண்ணையும் கருத்தையும் கவரத்தக்க நிலையில் திருப்பணிகள் செய்யப்பட்டுள்ளன. சுவாமி, அம்மன் கோயில் விமானங்கள் பரிவார ஆலயங்களின் விமானங்கள். புதுப்பிக்கப்பட்டும், புதிதாக மேலக்கோபுரம் நிறுவப்பட்டும், திருப்பணிகள் செய்பப்பட்டுள்ளன. அழகிய சிறிய தெப்பக் குளமும், நந்தவனமும் அமைந்துள்ளன.

இக்கோயிலைச் சிவகெங்கை சமஸ்தானம் நிர்வகித்து வருகின்றது, நாள் தோறும் சிறப்பான கால வழிபாடுகளும், மாதந்தோறும் பிரதோஷ விழாவும், மாசி பிர்மோத்சவமும், ஐப்பசியில் கந்தர் சஷ்டி விழாவும், நவராத்திரிவிழாவும் நடைபெற்று வருகின்றன. சமய சம்பந்தமான பல சொற்பொழிவுகளும், வழிபாடுகளும் இங்கு நடைபெற்று வருகின்றன.

இக்கோயிலில் வழிபட வருவோர் வாழ்வில் இம்மையிலேயே பல நன்மைகளைத் தந்துள்ளார் இவ்விறைவர். ஆகவே இத்தகைய நன்மை நல்கும் கோயிலை, கோயிலில் உறையும் நன்மைதருவாரை வழிபட்டு நல்லின்பம் பெறுவோமாக.

# அருளாளர் கண்ட காட்சி

சிவதர்ம பாஸ்கர ம. க. சுந்தரேச பட்டர்



தொன்மையான சமயமாகிய நம்முடைய சித்தாந்த சைவச்செந்நெறியில் திளைத்திட்ட அருளாளர்கள் பலராவர். சமயகுரவர் என்றும் அறுபான் மும்மை நாயன்மார் என்றும் வழங்கப்பெறும் அடியவர்கள் சிந்தையே சிவமதாக விளங்கிய நிலையினர். இதனை அப்பரடிகள் "சிந்தையே சிவமதானார் செம்பொன் பள்ளிமேயார்" என்று அருளுவர்.

டார்க்குமிடம் எங்கும் பரம் பொருளைக் காணும் பக்குவம் பரமனடியாரிடத்தே தான் உண்டு. சரியை கிரியை யோகம் ஞானம் கைவந்த நல்லோர் கண்ட கண்ட இடந்தோறும் கால கண்டம் தோன்றுகின்ற காட்சியைப் பெற்றவர்கள்.

அத்தகைய அடியவர் திருக்கூட்டத்தில் அழுதடி அடைந்த அன்பர் மணிவாசகரும் ஒருவர். அப்பரடிகள் கயிலாயக் காட்சியை ஐயாற்றில் கண்ட போது "காதன் மடப்பிடியோடு களிறுவருவன கண்டேன்" "கோழிப்பெடையோடு குலாவி வருவனகண்டேன்" 'இளமன நாகுதழுவி ஏறுவருவனகண்டேன்' என்று ஆணும் பெண்ணும் இணைந்துவரும் இன்பக் காட்சியினைக் கண்டு எங்கும் சிவமும் சக்தியும் இலங்குவதைப் பாடுகின்றார். அதனாற்றான் "கண்டேன் அவர் திருப்பாதம்—கண்டறியாதன கண்டேன்" என்றும் செம்மாந்து சிவனருள் பெற்றுச் செப்பமுடிந்தது.

சீரிய சிந்தையில் செம்மலர்த்தாள் தோய்தரச் சிவபெருமான் அடியார் இதயமாகிய பழங்குடில் தொறும் எழுந்தருள்கின்றான். திருநின்ற செம்மையே சிவன் விளங்குமிடம். அத்தகைய செம்மையைப் பெற்றவர்கள் சிவனடியார்கள். ஆகவேதான் வள்ளுவரும் செம்பொருள் என்றார்.

திருவருள் தோய்ந்த சிந்தையால் மணிவாசகர் கண்ட மாண்பு மிகு காட்சியைக் கீழ்க்கண்ட பாடல் நமக்கு எடுத்துக்காட்டுகிறது.

"பைங்குவளைக் கார்மலராற் செங்கமலப் பைம்போதால்
அங்கங் குருகினத்தாற் பின்னும் அரவத்தால்
தங்கள் மலங்கழுவு,வார் வந்து சார்தலினால்
எங்கள் பிராட்டியும் எங்கோனும் போன்றிசைந்த
பொங்குமடுவிற் புகப்பாய்ந்து பாய்ந்து நஞ்
சங்கஞ் சிலம்பச் சிலம்பு கலந்தார்ப்பக்
கொங்கைகள் பொங்கக் குடையும்புனல் பொங்கப்
பங்கயப் பூம்புனல்பாய்ந் தாடேலோர் எம்பாவாய்"

இப்பாட்டிலே—அழகான பொய்கை, அதிலே தாமரை மலர்கள் குவளை மலர்கள் மலர்ந்து காட்சியளிக்கின்றன. நீர்வாழ் பறவைகளும் பாம்பினமும் மல்கி இருக்கின்றன. புற அழுக்கை நீக்கும் மனிதர் கூட்டம் அதனைச் சாரவருகின்றது. இது புறக்கண்ணிலே தோன்றும் காட்சி. இக்காட்சியைக் கண்ட மணிவாசகர் இதனை எவ்வாறு அகக்கண்ணால் காணவேண்டும் என்றும் காட்டுகின்றார். தாமரை மலர்கள் மலர்ந்துள்ளமையைச் சிவபெருமானது செம்மேனியாகவும், குவளைமலர் குலுங்கும் தன்மையைப் பெருமாட்டி தன் பேரழகாகவும், இறைவன் பூணாரமாகப் பாம்புகளையும், அம்மை அணிந்த வளையல்களாகப் பறவைக் கூட்டத்தையும், மலங்கழுவுவார் வருவதனை மும்மலம் நீக்கி முத்தி பெறு அன்பர் கூட்டத்தின்வருகையாகவும் காட்டுகிறார். இப்படிப்பட்ட அருள் நீராட்டமும் நமக்குத் தேவை என்கின்றார்.

"நீரின்ப வெள்ளத்துள் நீந்திக்குளிக்கின்ற நெஞ்சங் கொண்டீர்
பாரின்ப் வெள்ளங் கொளப்பரி மேற்கொண்ட பாண்டியனார்
ஓரின்ப வெள்ளத்துருக்கொண்டு தொண்டரை உள்ளங் கொண்டார்
பேரின்ப வெள்ளத்துட் பெய்கழலே சென்று பேணுமினே."

பாரின்ப வெள்ளங்கொளப் பரிமேற் கொண்ட பெருமானை ஓரின்ப வெள்ளத்துருவமாகப்பொய்கையிலும்இன்னும் எல்லா இடங்களிலும்காட்டுகின்ற அருளாளர் காட்சியினை அவர் வழிநின்று நாமும் கண்டு பேரின்ப வெள்ளத்துள் பெய்கழலே சென்று பேணுவோமாக.



அறநிலையத்துறை ஆணையர் திரு. M. S. சாரங்கபாணி முதலியார், B. A., B. L.
அவர்களுக்கு வரவேற்பு.

உ

# பஞ்சாக்ஷர தரிசனம்.

பெ. கா. ஷண்முகநாதன், B. A., B., L., திண்டுக்கல்.

தொன்று தொட்டுத் தமிழகத்தில் தோன்றி மிகவும் சிறப்புற்றோங்கி, ஓர் காலத்தில் உலகம் முழுவதும் பரந்து நின்று, இன்றும் தன் சீரிளமை குன்றாது நிலவி வரும் நம் சுத்தாத்வைத சைவ சித்தாந்த சமயத்துக்கு மூல புருஷராயும், முழுமுதற் கடவுளாயும் திகழ்பவர் திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுளான சிவபிரானேயாவர். அரதத்த சிவாச்சாரியார் தாம் இயற்றிய 'சுருதி சூக்தி மாலை' என்ற வடமொழி கிரந்தத்தில் நான்கு வேதங்களாலும் பிரதி பாதிக்கப்படுகிறவர் நம் சிவபிரானே யென்று தகுந்த மேற்கோள் காட்டி நிரூபித்துள்ளார். தென்னாடுடைய சிவனே எந் நாட்டவர்க்கும் இறைவன் என்று மணிவாசகர் கூறினர். தான் ஆதிமத்யாந்தரஹிதரானாலும் இப்பிரபஞ்சத்துக்கு ஆதியும், நடுவும் ஈறுமாகி நிற்கும் செம்பொருள் சிவனேயாவர். ஒடுங்கிய இடத்திலேயே உற்பவம் ஆவது இயல்பாதலால் புராணாந்தரங்களில் ஸம்ஹார கர்த்தாவாகக் கருதப்படுகிற சிவபிரானே சிருஷ்டிகர்த்தாவாகவும் இருக்கமுடியும் என்பதை சிவஞான போதம் "அந்தம் ஆதி என்மனார் புலவர்" என்று பறை சாற்றுகிறது. சிவபிரானும் தன்னுடன் அக்னியில் சூடு போல அபின்ன மான அருள் சக்தியோடு சேர்ந்தே சிருஷ்டியாகி பஞ்சக்ருத்யங்களையும் செய்து உயிர்களின் வினைக்கீடாக தநு, கரண, புவன போகங்களை நல்கி இம்மையிலும் நன்மை தருவானாக விளங்கி வருகிறார். சாமவேதம் சிவனை "நமோ ஜ்யேஷ்டாய ஸ்ரேஷ்டாய" என்று புகழ்கின்றது. இந்த முழுமுதற் கடவுளுக்கு மூலமந்த்ரமாக அமைந்ததுவே 'பஞ்சாக்ஷரம்' என்ற மஹா மந்த்ரமாகும். ஏனைய சமயத்தினரும் அவரவர் கடவுள்களுக்கு மூலமந்த்ரம் வைத்திருக்கிறார்கள். ஆயினும் சிவவாக்கியத்தில் 'பரமோ மந்த்ரஸ் தாரகோயம் பஞ்சாக்ஷர:' என்று கூறுகின்றது. திருமூலரும்

'ஒன்று கண் டீர் உலகுக்கொரு தெய்வமும்
ஒன்று கண் டீர் உலகுக் குயிராவதும்
நன்று கண் டீர் நல் நமச்சிவாயப்பழந்
தின்று கண்டார்க்கு இது தித்தித்தவாறே.'

என்று கூறினர். சித்தாந்த சாஸ்த்ரங்கள் அனைத்தும் சிவனையடைய பஞ்சாக்ஷர ஜபமே சிறந்த ஸாதனம் என்கின்றன.

பஞ்சாக்ஷரத்தை ஆராய்வதன் முன் "மந்த்ரம்" என்றால் என்ன என்பதை நாம் அறிந்து கொள்ளல் வேண்டும். மந்த்ரம் என்பது மந் + த்ரா என்ற இரண்டு பதங்கள் சேர்ந்த ஒரு சொல். மந் என்றால் நினைத்தல், சிந்தித்

தல், ஜபித்தல் என்று பொருள். த்ரா என்றால் காப்பாற்றுகிறது, கரையேற்றுகிறது என்று பொருள் ஆக மந்த்ரம் என்றால் மநநம் செய்கிறவனைக் காப்பாற்றுகிறது என்றும் ஜபிக்கிறவனை ஸம்ஸார ஸாகரத்தினின்றும் கரையேற்றுகின்றது என்றும் பொருள்படுகின்றது. இதனை ஸூதஸம்ஹிதை யக்ஞவைபவ காண்டத்தில்

“மநநாத் த்ராண ரூபத்வாத் மந்த்ர இத்யாபிஸப்தித: என்றும் காமிகாகமம் மந்த்ராவதாரப் படலத்தில்

மந்த்ரம் ஸர்வ வேதித்வம் த்ராணம் ஸம்ஸார ஸாகராத்
மநந த்ராண தர்மித்வாத் மந்த்ரம் இதி அபிதியதே

என்றும் கூறுகின்றது. மந்த்ரம் தனது ஸப்த போதனத்தாலும் அர்த்த விசேஷத்தாலும் பக்குவ ஆன்மா இறைவனையடைய ஸாதனமாகின்றது. மந்த்ர ஸப்தத்தால் சில ஸூக்ஷ்ம சலனங்களை உண்டுபண்ண முடியும் என்பது அநுபவ பூர்வமான முடிபு. ஓசையென்பது பொருள்களின் அசைவினால் உண்டாவது. Sound is displacement of air by motion of bodies என்று விஞ்ஞானம் கூறும். ஆக அசைவும் ஓசையும் தொடர்புடையன. Sound and Motion are co-relative. அவற்றில் ஒன்று ஸ்தூலமாயும் மற்றொன்று சூக்ஷ்மமாயும் இரண்டும் ஸ்தூலமாயும், இரண்டும் சூக்ஷ்மமாயும், இருக்கும். ஆதியில் நிருபாதிக ஸம்வித்ரூபமாய் அருவமாய், குணங்குறியற்றதாய் இருந்த சிவத்திலிருந்து அதனுடன் அபின்னமாய் ஒன்றியிருந்த சக்தி ஸ்புரிக்கும்போது உண்டாகும் ஸ்பந்தனமும் (அசைவு) ஸப்தமுமே சிருஷ்டியின் ஆரம்பம்.

“ஸ்வ ஸக்தி ஸஹிதா தேவ த்விஜா ஜ்யோதிர்மய: பர:
ஸப்த ஸூக்ஷ்ம: ஸ்வபாவேன ப்ராதுராஸீத் அகண்டித:

அதாவது “தன் ஸக்தியுடன் கூடிய சிவத்தினிடமிருந்து பரமாயும், ஸூக்ஷ்மமாயும், ஜ்யோதிர்மய மாயுமுள்ள ஸப்தமானது ஸ்வபாகமாகவே அகண்டமாய் உண்டாயிற்று” என்று ஸூதஸம்ஹிதையில் கூறப்பட்டிருக்கின்றது. இந்த ஸூக்ஷ்ம ஸ்பந்தனத்தை பிந்து என்றும் ஸூக்ஷ்ம ஸப்தத்தை நாதம் என்றும் சாஸ்த்ரங்கள் கூறுகின்றன. பிந்து நாதங்களே சிருஷ்டியின் ஆரம்பம். இவை பின்னும் விரிந்து கனத்து விகஸித்து ஒரு தத்துவத்தினின்றும் மற்றொரு தத்துவம் உண்டாகும் போதெல்லாம் அவ்வற்றிற்குத் தகுந்த அசைவும் ஓசையும் முதலில் தொனியாத்மக மாகவேயிருக்கும். அதாவது ஓசையாக இருக்கும். இந்த ஸூக்ஷ்ம சலனங்களையும் ஸப்தங்களையும் தமது ஞானத்ருஷ்டியால் பார்த்த நம் முன்னோர்கள், த்வனியாத்மக மாக இருந்த் ஸப்தங்களை வர்ணாத்மக மாக்கினார்கள். அதாவது ஓசையை ஒலியாக்கினார்கள். இவர்களைத்தான் மந்த்ர த்ருஷ்டர்கள் என்றும், ரிஷிகள் என்றும் நிறை மொழி மாந்தர் என்றும் கூறுப. எந்த அசைவிலிருந்து எந்த ஒலி உண்டானதோ அந்த ஒலியை அளவு, ஸ்வரம்,

நியதி குன்றமல் திரும்பத் திரும்ப ஜபிப்பதால் அந்தக் குறிப்பிட்ட அசைவை யும் உண்டாக்க முடியும் என்பது யாரும் ஒப்புக்கொள்ளக்கூடியது தானே. ஆதலால் மந்த்ரங்களுக்கு அர்த்த விசேஷத்தைக் காட்டிலும் ஸப்த போதனமே அதிமுக்யத்வம் வாய்ந்தது, இது தான் மந்த்ர ஜபத்தின் அடிப்படையான தத்துவம்.

இனி மந்த்ரங்கள் நான்கு விதம். 1 ஸித்தம் - இவை ஜபிப்பதால் பயனளிப்பன. 2. ஸாத்யம்—கிரியைகளோடு கூடியே பயன் தருவன. விவாக மந்த்ரங்கள் போன்று, த்வஜாரோஹணம், கும்பாபிஷேகம், ஹோமம் முதலிய கிரியைகளுக்கு ஏற்பட்ட மந்த்ரங்களுக்கு ஸாத்யம் என்று பெயர். 3 ஸ்வஸித்தம், முன் சொல்லப்பட்ட இரண்டுக்கும் அதிகாரி பேதம் உண்டு. அதிகாரி யல்லாதவரும் மந்த்ரத்தின் பலனையடைய ஹேதுவாக பரம காருணீகரான நமது முன்னோர்கள் ஸ்தோத்திரப்பாக்கள் செய்து அவற்றில் மந்தராக்ஷரங்களை இலைமறைகாய்போல் ஒளித்து வைத்திருக்கின்றனர். அந்த ஸ்தோத்திரங்களைப் பாராயணம் பண்ணுவதாலேயே மந்த்ர ஜப பலனையடையலாம். நமது தேவார திருவாசகங்கள் அத்தகையன. வடமொழியில் இத்தகைய ஸ்தோத்திரங்கள் ஏராளமாக இருககின்றன. 4. ரிபு. இத்தகைய மந்த்ரங்களை நாம் சிந்திக்க வேண்டாம். அவை ஆபிசார மந்த்ரங்கள். இந்நான்கு வகையில் முதலாவ தாகச் சொல்லப்பட்ட "ஸித்தம்" என்ற வர்க்கத்தைச் சேர்ந்தது நமது பஞ்சாக்ஷரி, தொல்காப்பியர் மந்த்ரத்துக்கு இலக்கணம் கூறுங்கால்

"நிறைமொழிமாந்தர் ஆணையிற் கிளந்த
மறை மொழி தானே மந்திரம் என்ப" என்முர் நிறைமொழி

மாந்தரில் ஸூக்ஷ்ம ஸப்த சலனங்களை யறிந்து கூறப்பட்ட இரகசியமான பதச் சேர்க்கைகளே மந்த்ரம் என்று பொருள். இந்த சூத்திரத்தையே வள்ளுவரும்

நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டிவிடும். எனக் கூறிப்போந்தார்.

மந்த்ரம் என்பது சில எழுத்துக்களின் சேர்க்கை அல்லது பதங்களின் சேர்க்கை. பஞ்சாக்ஷரி என்ற மந்த்ரம் ஸ்தூல உருவத்தில் ந. ம. சி. வ. ய. என்ற ஐந்து எழுத்துக்களின் சேர்க்கை. இதனை நம: சிவாய என்று இரண்டு பதங்களாய்ப் பிரித்து சிவனுக்கு நமஸ்காரம் என்ற சாமான்யப் பொருளிலேயே சாதாரண மக்களால் அறியப்படுகின்றது. அது பொருந்தாது என்பதனை பின்னல் விளக்குவோம். திருஞானசம்பந்தர் இதனை "வேதம் நான்கினும் மெய்ப் பொருளாவது" என்று கூறுகின்முர். வேதம் ருக், யசுர், ஸாமம் என மூன்றில் நடுவனவாகிய யசுர் வேதத்தில், அதன் ஏழு காண்டங்களில் நடுவாகிய நான்காவதுகாண்டத்தில் ஐந்தாவது ப்ரச்னமான ஸ்ரீ ருத்ரத்தின் நடுவில் "நம: ஸ்ரீவாயச" "ஸ்ரீவ தராயச" என்று ஸ்தூல பஞ்சாக்ஷரமும், மஹா

காரண பஞ்சாக்ஷரமும் அமைந்திருக்கின்றது. இதுபோல் தேவாரம் பாடிய மூவரில் நடுவில் இருப்பவர் அப்பர். அவர் திரு முறைகள் நான்கு ஐந்து ஆறு திருமுறைகளில் நடுவணதான ஐந்தாம் திருமுறையில் அடங்கிய நூறு பாடல்களில் நடுப்பதிகம் 51வது திருப்பாலைத்துறைப் பதிகம். அதில் பதினொரு பாசுரங்கள் அவற்றின் நடு ஆறுவது பாசுரம். அதில் "மறவாது சிவாய வென்றெண்ணினூர்க்கு" என்று மஹத்தான காரண பஞ்சாக்ஷரம் வருகிறது. மேலும் தமிழ் வேதமான பன்னிரு திருமுறைகள் ஒவ்வொன்றிலும் பஞ்சாக்ஷரம் விரவி வருகின்றது. திருஞானசம்பந்தர் பாடியருளிய முதல் மூன்று திருமுறைகளில் ஆறு இடங்களில் ஐந்தெழுத்து பேசப்படுகின்றது. மூன்ரும் திருமுறை 49வது பதிகம் 11 பாசரங்களிலும் பஞ்சாக்ஷரத்தை வைத்தேபாடியிருக்கின்ருர். மேலும் தனக்கு உபநயனச் சடங்கு செய்ய வந்த வேதியர்க்கு இவர் பஞ்சாக்ஷர உபதேசம் செய்து

"செந்தழல் ஓம்பிய செம்மை வேதியர்க்கு
அந்தியுள் மந்திரம் அஞ்செழுத்துமே" என்று கூறினர்.

அப்பர் அடிகள் பாடியருளிய 4, 5, 6, திருமுறைகளில் 20 இடங்களுக்கு மேல் பஞ்சாக்ஷர ப்ரயோகம் வருகின்றது. அதிலும் 4ம் திருமுறை 11வது பதிகம் பூராவும் நமச்சிவாயப் பதிகமாகவே அமைந்திருக்கின்றது. மேலும் 4, 81, 8ல் "படைக்கலமாக உன்னுமத் தெழுத்தஞ் சென் நாவிற்கொண்டேன்" என்று பாடுகிருர். 5. 60. 1ல் ஏதுமொன்றும் அறிவிலராயினும், ஓதி அஞ்செழுத்துமுணர்வார்கட்குப் பேதமின்றி அவரவர் உள்ளத்தே மாதும் தாமும் மகிழ்வர் மாற்பேறரே" என்று கூறுவதில் பஞ்சாக்ஷரம் ஓதுவதில் அதிகாரி பேதமில்லை என்றே கூறி விடுகின்ருர். சுந்தரர் "நற்றவா உன்னை நான் மறக்கினும் சொல்லும் நா நமச்சிவாயவே" என்று 7. 48ல் ஒன்பது முறை "நமச்சிவாயவே" என்று பாடுகின்ருர். 8ம் திருமுறை பாடிய மாணிக்கவாசகர் "நமச்சிவாய வாழ்க" என்று ஸ்தூலபஞ்சாக்ஷரத்தில் ஆரம்பித்து, திருச்சதகம் "காருணியத்திரங்கல் என்ற பகுதியில் 'போற்றியோ நமச்சிவாய' என்று போற்றி திருவேசறவுப்பதிகத்தில் "நானேயோ தவஞ் செய்தேன் சிவாய நம எனப் பெற்றேன்" என்று சூக்ஷ்ம பஞ்சாக்ஷரத்தில் முடித்திருக்கின்ருர். ஒன்பதாம் திருமுறையில் திருமாளிகைத் தேவர் "ஐந்தெழுத்தும் பிதற்றிப் பிணிதீர வெண்ணீறு இடப்பெற்றேன்" என்று மகிழ்கின்ருர். பத்தாம் திருமுறையைப் பற்றிப் பின்னல் விரிவாகப் பார்ப்போம். பதினேரும் திருமுறையில் நக்கீரர் "அஞ்செழுத்தும் கண்டீர் அருமறைகளாவனவும்" என்றும் "வாயிலே வைக்குமளவின் மருந்தாகித் தீய பிறவிநோய் தீர்க்குமே...... ஒரஞ்செழுத்து" என்றும் பாடுகின்ருர். பன்னிரெண்டாம் திருமுறையில் சேக்கிழார் ஸ்வாமிகள் பல திருத்தொண்டர் புராணங்களில் பஞ்சாக்ஷரத்தை பிரஸ்தாபித்திருக்கிருர்.

அப்பரடிகளுக்கு அவர் தமக்கையார் அஞ்செழுத்தோதி திருநீறுகொடுக்கின்ருர். அமர்நீதி நாயனர் அஞ்செழுத்தோதி துலைத்தட்டில் ஏறுகின்ருர். சேரமான் பெருமான் தனது குதிரையின் காதில் அஞ்செழுத்தோதி ஆகாயத்தில் பறக்க விடுகின்ருர், இதுபோல் பல இடங்கள். நேச நாயனர் புராணத்தில் "ஓங்கிய வாக்கின் செய்கை உயர்ந்த அஞ்செழுத்துக்காக்கி" என்று குறிப்பிடுகின்ருர். பன்னிருதிருமுறை தகர ஒற்ருேடு சேர்ந்த ஓ என்ருரம்பித்து உலகெலாம் என்று 'ம்'ல் முடிகின்றது. பன்னிரு திருமுறைகளிலும் பஞ்சாக்ஷரத்தின் பல்வேறு ரூபங்கள் எடுத்தாளப்படுகின்றன. ஆக பிரணவத்திலிருந்து பஞ்சாக்ஷரமும், பஞ்சாக்ஷரத்திலிருந்து வேதமும் தோன்றியதை நினைவூட்டுவதுபோல் நமது சைவத்திருமுறைகள் அமைந்திருப்பது ஓர் அரிய விசேஷம்.

மந்த்ர ஜபத்தால் இறைவனையடையலாம் என்பதை ஸூத ஸம்ஹிதை "ஸப்தான்வய விஹீநாய ஸப்தலப்யாய ஸாக்ஷிநே" என்று கூறுகின்றது, ஸப்தமாகிய வாக்கால் அளக்கமுடியாத பரம்பொருள் மந்த்ர ஸப்தத்தால் அடையமுடிகின்றது. சிவஞான போதம் 9ம் சூத்திரத்தின் மூன்ரும் அதிகரணத்தில் பஞ்சாக்ஷர ஜபத்தால் சிவனைக்காணலாம் என்பதற்கு முறைகூறுகிறது.

'அஞ்செழுத்தால் உள்ளம் அரனுடைமை கண்டு அரனை
அஞ்செழுத்தால் அர்ச்சித்து இதயத்தில்—அஞ்செழுத்தால்
குண்டலியிற் செய்தோமம் கோதண்டம் சானிக்கில்
அண்டன் ஆம் சேடன் ஆம்".

என்று அந்தர்யாகம் அல்லது ஆந்த்ர பூஜைமுறையும் யோகமுறையும் கூறி விளக்குகின்றது. விரிவஞ்சிவிடுத்தனம்.

இனி பஞ்சாக்ஷர மந்த்ரத்தில் அடங்கியிருக்கும் தத்துவங்களை ஆராய்வோம், பஞ்சாக்ஷரம் ஐவகைப்படும். 1. ஸ்தூலபஞ்சாக்ஷரம் என்பது "நமசிவய" 2. ஸூக்ஷ்ம பஞ்சாக்ஷரம் "சிவாய நம" 3. காரண பஞ்சாக்ஷரம் "சிவய சிவ" அல்லது "சிவய வசி" 4. மஹா காரண பஞ்சாக்ஷரம் "சிவ சிவ" 5. மநு பஞ்சாக்ஷரம் "சி" பஞ்சாக்ஷரியில் அடங்கிய ஒவ்வொரு அக்ஷரமுமே மஹாசக்திவாய்ந்தவை. பஞ்சாக்ஷரமே பரமேச்வரன் ரூபம் என்று "பஞ்சப்ரம மோபநிஷத்" கூறுகின்றது. "பஞ்சாக்ஷரமயம் ஸம்பும்". இந்த ஐந்தெழுத்துகளுமே ஸதா சிவ மூர்த்தியின் ஸத்யோ ஜாதம், தத்புருஷம், அகோரம், வாமதேவம், ஈசானம் என்ற ஐந்து முகங்களாம். அவன் செய்யும் "சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், திரோபவம், அநுக்ரஹம்" என்ற ஐந்தொழிலும் இவ்வைந்தெழுத்தேயாம். இவ்வைந்தெழுத்துகளே பஞ்சபூதங்களும், பஞ்சஞானேந்த்ரியங்களும், பஞ்ச கர்மேந்த்ரியங்களும், இவ்வைந்தெழுத்தே உலகத்தைத் தாங்குகிறது. "பாங்க்தம் வா இதம் ஸர்வம் பாங்க்தேநைவ பாங்க்தம் ஸ்ப்ருணோதி என்று தைத்திரீய உபநிஷத் உத்கோஷிக்கின்றது. சிருஷ்டிக்கப்பட்ட ப்ரபஞ்சம் அனைத்தும் பஞ்ச பூதங்களால்

ஆனவை. ஐந்தாலாகிய ப்ரபஞ்சத்தே ஐந்தே தாங்குகிறது என்பது பொருள். திருமூலரும்

"அஞ்செழுத்தால் ஐந்து பூதம் படைத்தனன்
அஞ்செழுத்தால் பல யோனி படைத்தனன்
அஞ்செழுத்தால் இவ்வகலிடம் தாங்கினன்
அஞ்செழுத்தாலே அமர்ந்து நின்ருனே." என்று கூறுகின்ருர்.

திருவம்பலக் கூத்தனின் ஆனந்த வடிவம் இவ்வைந்தெழுத்தே. இதனை மெய்கண்ட நூல்களில் ஆருவதான உண்மை விளக்கத்தில் திருவதிகை மனவாசகங்கடந்த நாயனுர் ஒன்பது பாடல்களால் விளக்குகிருர்.

"எட்டும் இரண்டும் உருவான இலிங்கத்தே
நட்டம், புதல்வா! நவிலக் கேள்—சிட்டன்
சிவாயநம என்னும் திரு எழுத்தஞ்சாலே
அவாயமற நின்ருடு வான்."

தமிழ் எண்களில் எட்டு என்பது 'அ' என்றும் இரண்டு என்பது 'உ' என்றும் எட்டும் இரண்டும் சேர்ந்த பத்து என்ற எண் 'ய' என்றும் குறிக்கப்படுவதை அறியாதார் யார்? அகாரம் சிவம். உகாரம் சக்தி யகாரம் ஆன்மா. சிவசக்தி சம்மேளனத்தாலே (எட்டும் இரண்டும் கூடுவதாலே) உயிர்கள் தோன்றுகின்றன. இந்த ஆன்மாவில், இறைவன், அவ்வான்மாவின் மலமாகிற அபாயம் நீங்கும் பொருட்டு பஞ்சாக்ஷரமே திருமேனியாகக்கொண்டு ஆடுகிருன். எப்படி?

"ஆடும்படி கேள் அம்பலத்தான், ஐயனே!
நாடும்திருவடியிலே நகரம்—கூடும்
மகரம் உதரம். வளர் தோள் சிகரம்
பகருமுகம் வா. முடி யப்பார்." இது கூத்தப்பெருமானை அடியிலிருந்து முடிவரை பார்த்தது. இது ஸ்தூல பஞ்சாக்ஷரம். ஊன்றிய திருவடி ந. வயிறு ம. வீசியகரம் சி. திருமுகம் வா. திருமுடி, ய. என்று கூறப்படுகின்றது.

"சேர்க்கும் துடி சிகரம் சிக்கன வா வீசுகரம்
ஆர்க்கும் ய கரம் அபயகரம்—பார்க்கிலிறைக்கு
அங்கி நகரம் அடிக்கீழ் முயலகனுர்
தங்கும் மகரமது தான்."

இது மேலிருந்து கீழ்நோக்குதல். சூக்கும பஞ்சாக்ஷரம். டமருகம் ஏந்தியகை சி. கஜஹஸ்தம் வா. அபயகரம் ய, தழல் ஏந்தியகை ந. முயலகன் ம, என்று கூறப்படுகின்றது.

சம்பந்தப் பெருமான் 3. 22. 5ல் இறைவனின் அபயகரமே ஐந்தெழுத்து என்கின்றார். "அங்கையில் ஐவிரல் அஞ்செழுத்துமே" என்பது அவர் வாக்கு. நிற்க உண்மை விளக்கத்தின் இன்னொரு பாட்டில் இதுவரை சொல்லாத ஓர் தத்துவ இரகசியத்தை வைத்திருக்கிறார்.

"ஓங்காரமே நல் திருவாசி உற்றதனில்
நீங்கா எழுத்தே நிறை சுடராம்—ஆங்காரம்
அற்றார் அறிவர் அணி அம்பலத்தான் ஆடலிது
பெற்றார் பிறப்பற்றார்."

இப்பாட்டுக்கு விளக்க உரை எழுதினால் மிக விரிவாகிவிடும். சுருக்கமாகக் கூறுவாம். நடராஜாவின் திருவாசியே 'ஓம்' என்ற பிரணவம். ப்ரணவத்தை விட்டு நீங்காத ஐந்தெழுத்தே அதன் உள்ளொளி என்றது ஓர் ஆழ்ந்த கருத்து. ஓம் என்ற ப்ரணவம் அகர உகர மகரங்களாகிற மூன்று எழுத்துக்களின் சேர்க்கை என்றே சாமான்யர்கள் கருதுகிறார்கள். உண்மை அதுவல்ல. அ. உ. ம. மட்டுமல்ல. பிந்து, நாதம் என்ற இரண்டு அம்ஸங்கள் சேர்ந்ததே பிரணவம். இதை காமிகாகமம்

"ப்ரதமம் தாரகா காரம், த்விதியம் தண்டமுச்யதே, த்ரிதியம் குண்டலாகாரம்
சதுர்த்தம் ஹி அர்த்த சந்த்ரகம் பஞ்சமம் பிந்து ஸம்யுக்தம்
ப்ரணவம் பஞ்சலக்ஷணம்"

என்று கூறியிருப்பதில் கண்டறிக. இந்த ஐந்து அம்ஸங்களே பஞ்சாக்ஷரமாய் விரிந்தது. அகாரத்தில் சிகாரமும், உகாரத்தில் வகாரமும், மகாரத்தில் யகாரமும், பிந்துவில் நகாரமும் நாதத்தில் மகாரமுமாக விரிந்தன. இந்த இரகசியத்தை ஆணவமற்றார் அறிவார். இவ்வாறு அறிந்தவர்களுக்குப் பிறப்பில்லை என்று இந்தப் பாடல் கூறுகின்றது.

முன்பு கூறியபடி பஞ்சாக்ஷரத்தை நம: சிவாய என இரண்டு பதங்களாய்ப் பிரித்துப் பொருள் கொள்வர் சாமான்னியர். சித்தாந்த சாஸ்த்ரங்களும் ஆகமங்களும் இதனை ஒப்புக்கொள்வதில்லை. "நாதன் நாமம் நமச்சிவாயவே" என்ற போதும், 'நமச்சிவாய வாழ்க' என்ற போதும் "நாவினுக்கு அருங்கலம் நமச்சிவாயவே" என்ற போதும் "சிவனுக்கு நமஸ்காரம்" என்ற பொருள் பொருந்தாது என்பது வெள்ளிடைமலை ந. ம. சி. வ. ய. என்ற ஐந்தெழுத்தே மந்த்ரம் என்கின்றார் திருமூலர்.

"சிகார வகார யகாரமுடனே
நகார மகாரம் நடுவுற நாடி
ஓகாரமுடனே ஒருகாலுரைக்க
மகார முதல்வன் மதித்து நின்றானே.'

என்று பஞ்சாக்ஷரலக்ஷணமும் ஜப பலனும் கூறுகின்றார். இதிலிருப்பது இரண்டு பதமல்ல ஐந்து பதம் என்கின்றார் சுந்தரர். "அந்தியும் நண்பகலும் அஞ்சுபதம் சொல்லி" என்பது அவர்வாக்கு. (7, 83, 1. திருவாரூர்),

ஆகையால் பஞ்சாக்ஷரியில் இருக்கும் ஐந்து எழுத்துகளும் ஐந்து பதங்கள் ஆகின்றன. இவை சூக்ஷ்ம பஞ்சாக்ஷரமாகின்றன. 'சிவாய நம' என்பதில் சி. சிவத்தையும்; வ. அருள் சக்தியையும்; ய. ஆன்மாவையும்; ந. திரோதத்தையும்; ம. மலத்தையும் குறித்து நிற்பன. இப்பொருளைத்தான் 10ம் திருமுறையாகிற திருமந்திரமும், 14 மெய்கண்ட நூல்களும் கூறுகின்றன. 10ம் திருமுறையில் 4ம் தந்திரமும், 9ம் தந்திரமும் பஞ்சாக்ஷரத்தின், அமைப்பு, ரூபபேதங்கள், பிரயோகங்கள், ஜபத்தால் ஏற்படும் பலன், அதற்குரிய யந்த்ர சாதனம் முதலியவற்றை விரிவாகக் கூறுகின்றன. திருமந்திரம், 9ம் தந்திரம் 6வது பிரிவு 3வது பாடல்

"சிவனருளாய சிவன் திருநாமம்
சிவனருள் ஆன்மாத் திரோதம் மலமாயை
சிவன் முதலாகச் சிறந்து நிரோதம்
பவமது அகன்று பர சிவனுமே.

என்றும், உண்மை விளக்கம் 41வது பாடல்

"சிவன் அருள் ஆவி திரோதம் மலம் ஐந்தும்
அவன் எழுத்தஞ்சின் அடைவாம்"

என்றும், சிவப்பிரகாசம் 10ம் சூத்திரம் 12வது பாடல்

" திருவெழுத்தைந்தில் ஆன்மாத் திரோத மாசருள் சிவஞ் சூழ்
தர நடு நின்றதொன்றுந் தன்மையுந் தொன்மையாகி
வரு நம மிகுதியாலே வாசியில் ஆசையின்றிக்
கரு வழிச் சுழலுமாறுங் காதலார்க்கு ஓதலாமே.''

இதற்கு விளக்கம் தேவைப்படும். கூறுதும், பஞ்சாக்ஷரியிலே ஆன்ம அக்ஷர மான யகாரம் திரோதன சக்தி அக்ஷரமான நகாரம் மல அக்ஷரமான ம. அருள் சக்தி அக்ஷரமான வ. சிவாக்ஷரமான சி. இவை நான்கும் முன் இரண்டும் பின் இரண்டுமாகச் சூழ்ந்து நிற்கும். ஆன்மாக்கள் மலத்திரோதயி மேலீட்டாலே அருளிலும் சிவத்திலும் விருப்பமில்லாதிருக்கும். அதனால் பல பிறவிகளை எடுக்கும், பிறப்பறுக்கும் ஆசையுடைய முமுக்ஷுக்களுக்கே இந்த உண்மை யைச் சொல்லலாகும், என்பது பொருள். மேலும் திருவருட் பயன் என்ற சித்தாந்த நூலில்

" இறை சக்தி பாசம் எழில்மாயை ஆவி
உற நிற்கும் ஓங்காரத்துள்.

என்ற குறள் வெண்பா ஓங்காரத்துள்ளும் அதன் விரிவாகிய பஞ்சாக்ஷரத்துள்ளும் சிவம், சக்தி, திரோதம், ஆணவம், ஆன்மா என்ற ஐந்து அம்ஸங்களும் இருப்பதைக் கூறி அடுத்த குறளில்

"ஊன நடனம் ஒரு பால் ஒரு பாலாம்
ஞான நடம் தான் நடுவே நாடு"

என்கின்றார். ஊனநடனம் என்பது லௌகீகப் பற்று, அது ந. ம. என்ற இரண்டு. எழுத்துக்களால் குறிக்கப்படும். ஞானநடம் என்பது சி. வ. என்ற இரண்டு எழுத்துக்கள். அவை சிவத்தையும் அருள் சக்தியையும் குறிக்கின்றன. இவற்றின் மத்தியில் ஆன்மாவாகிற யகரம் நிற்கும்.

அதாவது சிவய நம. என்றதில் ஞான நடம் முன்னும், ஊன நடம் பின்னும் நின்றதறிக. அஃதேயன்றி நமயவசி. நமயசிவ. என்பவை ஸ்தூல பஞ்சாக்ஷரத்தின் பேதங்களில் இரண்டு. ஈண்டு ஊன நடனம் முன்னும் ஞான நடம் பின்னும் வருவதறிக. 'சிவப்பிரகாசமும்' 'திருவருட் பயனும்' உமாபதி சிவம் அருளியவை. இதுகாறும் பார்த்ததிலிருந்து பஞ்சாக்ஷரியின் தூலப் பொருள் என்னவென்றால் யகாரத்தால் குறிக்கப்படும் ஆன்மா நகாரத்தால் குறிக்கப்படும் மறைப்பு சக்தியின் அதிஷ்டானத்தால் மகாரத்தால் குறிக்கப்படும் ஆணவ மலத்தில் கட்டுண்டு கிடக்கும். அப்போது அது தன்னையும் அறியாது சிவத்தையும் அறியாது. அந்நிலையில் அது பல பிறவிகள் எடுத்து உழலும். பல பிறவிகள் எடுப்பதால் சிறிது சிறிதாக விகாசம் ஏற்பட்டு அருள் சக்தி தோய அது சிவத்தை நாடும். வகாரத்தால் குறிக்கப்படும் அருள் சக்தியின் உதவியால் சிகாரத்தால் குறிக்கப்படும் சிவத்தை நாட நகரமகரங்களான மலத்திரோதயி மறைய சிவமாகவே ஆகிவிடும். இன்னும் விரிக்கில் பெருகுமாதலால் இடவசதியைக் கருதி இம்மட்டோடு நிறுத்துவோம். இப்பொருளுணர்ந்து ஜபிப்பவர் "கீடப்ரமர" ஞாயத்தால் (அதாவது எதை சதா நினைக்கின்றோமோ அதுவாக ஆகிவிடுவது. ஆங்கிலத்தில் Auto Suggestion என்பார்கள்) ஆன்மா சிவமாகும் இதனை திருமூலர்

"நமவென்னும் நாமத்தை நாவில் ஒடுக்கிச்
சிவ வென்னும் நாமத்தைச் சிந்தையுளேற்றப்
பவமது தீரும் பரிசு மதற்றால்
அவமது தீரும் அறும் பிறப்பன்றே" என்றார்.

இனி பஞ்சாக்ஷரத்தின் ஐந்து வகைகளைக் கூறுவாம். இது முன்பே சுருக்கமாகக் கூறப்பட்டது. நமசிவய என்பது ஸ்தூல பஞ்சாக்ஷரம். இதனை பெத்தபஞ்சாக்கரம் என்றும் கூறுவர். நகாரமகாரங்களை முன்வைத்து ஓதினால் மல நீக்கம் ஏற்படாது. ஆன்மா கட்டினின்றும் மீளாது. ஆகையால் சிவ

என்பதை முன்வைத்து ஓதுவதே முறை. அப்படி ஓதுவதால் பேரின்பம் எய்தலாம். உண்மை விளக்கம் 43வது வெண்பா இதனை வலியுறுத்துகின்றது.

"ஆதி மலமிரண்டும் ஆதியாய் ஓதினால்
சேதியா மும்மலம் தீர்வாகா—போதம்
மதிப்பரிதாம் இன்பத்தே வாழலாம் மாறி
விதிப்படி ஓது அஞ்செழுத்துமே."

என்றதால் சூக்ஷ்ம பஞ்சாக்ஷரமாகிற 'சிவாய நம' என்பதே ஓதத்தகுந்தது என்பது புலனாகின்றது. துகளறு போதம் என்ற சித்தாந்த நூலும் இதையே கூறியிருக்கின்றது, 82வது பாடலில்.

"அஞ்செழுத்தும் அண்ணல் அருள் ஆன்மா திரோதம் மலம்
மிஞ்சி நமத்துரந்து மெய்யருள் வாத்—தஞ்சச்
சிகாரத்தில் யவ்வை விடுந்தீதிலா இன்பப்
புகாரிற் புகுந்தருந்தப் போய்."

என்று துகளறுபோதம் உபதேசிக்கின்றது. அதாவது சிவாய நம என்ற ஸூக்ஷ்ம பஞ்சாக்ஷரியில் முறையே சிவனும், அருள் சக்தியும், ஆன்மாவும், திரோதான சக்தியும், ஆணவமலமுமாம். வீடு பேற்றை விரும்புவோர் நமசிவய என்று திரோதம் முற்பட ஓதாமல் சிவாயநம என்றே ஓதுதல் வேண்டும். அப்படி ஓதுபவரை வகரமாகிற அருள் சக்தி உயிருக்கு களைகணான சிகரமாகிற சிவத்தில் சேர்க்கும், அவ்வாறு சேர்ந்து இன்பக்கடலில் மூழ்கித் திளைப்பாயாக, என்பது பொருள்.

மூன்றாவது காரண பஞ்சாக்ஷரம். இதை இரண்டு விதமாகக் கூறுவர்:— "சிவயசிவ" என்றும் "சிவயவசி" என்றும். முற்கூறப்பட்ட ஸூக்ஷ்ம பஞ்சாக்ஷர ஜபத்தால் மகாரமாகிற ஆணவ மலம் சிவத்தில் ஒடுங்கும். நகரமாகிற மறைப்பு சக்தி வகரத்தில் ஒடுங்கி அருள் சக்தியாக மாறிவிடும். அப்பொழுது ஆன்மா சிவயவசி என்ற நிலையில் நிற்கும். இந்த காரண பஞ்சாக்ஷரத்தை அதிசூக்ஷ்ம பஞ்சாக்ஷரம் என்றும் கூறுப. திருமூலர்

"சிவாயநம வெனச் சித்தம் ஒருக்கி
அவாயம் அறவே யடிமைய தாக்கிச்
சிவாய சிவ சிவ வென்றென்றே சிந்தை
அவாயம் கெட நிற்க ஆனந்தமாமே."

என்றுரைத்தார். இதற்குமேல் மஹாகாரண பஞ்சாக்ஷரம் என்பது நான்காவது நிலை. இது ஆன்மா அருள் சக்தியின் அருளால் சிவத்தோடு ஒடுங்கியதைக் குறிக்கும். இதில் யகரமாகிற ஆன்மாவும் மறைந்து சிவ சிவ என்றே நிற்கின்ற அடுத்த மேல் நிலை கூறப்பட்டது. இதனைத் திருமூலர்

"சிவ சிவ என்றே தெளிகிலர் ஊமர்
சிவ சிவ வாயுவுந் தேர்ந்துள் அடங்கச்
சிவ சிவ வாய தெளிவினுள்ளார்கள்
சிவ சிவ வாகுந் திருவருளாமே."

என்று கூறினர். இதன் பயனைத் தெளிய விளக்குகின்றார் அடுத்த பாடலில்.

"சிவ சிவ என்கிலர் தீவினையாளர்
சிவ சிவ என்றிடத் தீவினை மாளும்
சிவ சிவ என்றிடத் தேவரு மாவார்
சிவ சிவ என்னச் சிவகதி தானே."

இது ஒரு அழகான பாடல். இதைத் திரும்பச் சொல்லுவதே ஓர் ஜப கர்மா வாகும்.

இனிக் கடைசியாக இவ்வாறு மஹா காரண பஞ்சாக்ஷர ஜபத்தின் இறுதியில் ஆன்மாவும் அருள் சக்தியும் கூட சிவத்திலேயே ஒடுங்கி "சி" என்ற ஓர் எழுத்தாகவே நின்றுவிடும். இந்த ஓர் எழுத்தே மநு பஞ்சாக்ஷரம் எனப் பிரஸித்தி பெற்றது. இந்த நிலையில் சிவத்தைத் தவிர வேறு அந்நிய மான வஸ்து யாதொன்றுமின்றியே அவனே தானுய் ஆகிய நிலையில் நிற்கும். இந்த 'சி' என்ற ஒரு அக்ஷரத்தை திருமூலர் பரிபாஷையாகவும் நகைச்சுவை யுடனும் "நாயோட்டு' மந்திரம் என்பர். நாயை 'சி' என்று ஓட்டுதல் மரபாதலின் என்க.

"நா யோட்டு மந்திரம் நான் மறை வேதம்
நா யோட்டு மந்திரம் நாதனிருப்பிடம்
நா யோட்டு மந்திரம் நாதாந்த சோதி
நா யோட்டு மந்திரம் நாமறி யோமே.

என்கின்றார். நாயோட்டு மந்திரம் என்பதனை நகரத்தால் குறிக்கப்படும் ஆணவ மலத்தை ஓட்டும் மந்திரம் என்று கூடப்பொருள் கொள்ளலா மல்லவா?

இவ்வைந்து பஞ்சாக்ஷரங்களையும் ஐந்து வகை என்று கூறுவதைவிட ஐந்து நிலைகள் என்றே கூறலாம். ஐந்து அநுபவங்கள் என்றும் கூறலாம். ஒன்றின் மேலொன்றாக ஏறு வரிசையில் சாதகன் அடையும் அநுபவங்களே இவ்வைந்தும். இவற்றை முறையே ஜாக்ர ஸ்வப்ன சுஷுப்தி துரியம் துரியா தீதம் என்ற நிலைகளில் உண்டாகும் அநுபவங்களாகும். மநுபஞ்சாக்ஷரம் துரியாதீத நிலையாகையால் தான் திருமூலர் கூட "நாயோட்டு மந்திரம் நாமறி யோமே" என்றனர். அந்நிலை அறிவு, அறிபவன், அறியப்படும் பொருள்

மூன்றும் அற்ற இடமல்லவா? மேலும் இவை அன்னமய கோசம், பிராணமய கோசம், மனோமய கோசம், விக்ஞானமய கோசம், ஆனந்தமய கோசம் என்ற ஐந்து கோசங்களால் முறையே அநுபவிக்கப்படுவன. இந்த அரிய தத்துவங் களை சதாச்சாரியனிடம் கேட்டுத் தெளிவுறல் வேண்டும்.

ஆக ஸ்தூல பஞ்சாக்ஷரத்தில் சிகர வகரத்தைப் பின்னிட்டு ஆன்மா மறைப்பு சக்தியால் மயக்குண்டு ஆணவமலத்தால் கட்டுண்டு பிறவிப் பெருஞ் சுழியில் உழலும் நிலையையும், சூக்ஷ்ம பஞ்சாக்ஷரத்தில் ந. ம.க்களைப் பின்னிட்டு அருள் சக்தி துணையால் சிவனை நாடுதலையும், காரண பஞ்சாக்ஷரத்தில் திரோதயி அருள்சக்தியாக மாற ஆணவம் கெட்டு சிவத்தை அடைந்த நிலையும், மஹாகாரண பஞ்சாக்ஷரத்தில் ஆன்மா சிவத்தோடும் சக்தியோடும் ஒன்றிய நிலையும், மஹா பஞ்சாக்ஷரத்தில் ஆன்மா அருள் சக்தியோடு சிவத்தில் கலந்து அவனே தானான நிலையும் படிப்படியாய் நிகழும் ஆன்ம விகாசமே இவ்வைவகை பஞ்சாக்ஷரியில் விளக்கப்பட்டதாக அறியவேண்டும்.

கடைசியாக பஞ்சாக்ஷரம் ஜபிப்பதற்கு அதிகாரத்வம் வேண்டாமோ எனின் கூறுதும். சத்குருவையடைந்து அவரால் தீக்ஷாஸம்ஸ்காரம் பெற்று பஞ்சாக்ஷர உபதேசம் பண்ணப்பட்ட அதிகாரியே பஞ்சாக்ஷர ஜபம் செய்ய அர்ஹதையுடையவன் என்பது தான் ஆன்றோர் வகுத்த வழி. ஆயினும் நெருப்பு என்று தெரியாமல் தொட்டாலும் சுடுவது போல குருவருளின்றி நூல்களில் வாசித்தோ பிறர் சொல்லக்கேட்டோ 'சிவாய நம' என்றோ 'சிவ சிவ' என்றோ ஜபித்து வருவாராயின் அதற்குப் பலன் ஏற்படாது என்று ஒரேயடியாய்க் கூறிவிடவும் முடியாது. ஆனால் குருமுகமாய் உபதேசம் பெறும் போது பஞ்சாக்ஷரியோடு வேறு சில பீஜாக்ஷரங்களை வ்யாக்ருதிகளாகச்சேர்த்து உபதேசிப்பார். அம்மட்டேயன்றி மந்த்ரத்தைச் சொல்லவேண்டிய முறை, உச்சரிப்பு, கால அளவு முதலியவற்றையும் சொல்லிக் காட்டுவார். முன்பே சொன்னபடி மந்த்ரத்தின் பொருள் முக்யமல்ல. அது உச்சரிக்கும் முறையே முக்யமாகும். அம்முறையில் உச்சரித்தால் தான் மந்த்ரத்தால் குறிப்பிட்ட ஸௌக்ஷ்ம சலனங்களை உண்டுபண்ணமுடியும். ஒவ்வொரு மந்த்ரத்துக்கும் தியானசுலோகங்கள் உண்டு. மந்த்ரத்தால் உண்டாக்கப்படும் ஸௌக்ஷ்ம சலனங் களை உருவமாக்கியவையே இந்த தியான சுலோகங்கள். இந்த தியான சுலோ கத்தை குருவே உபதேசம் செய்வார். அந்த தியான சுலோகத்தில் குறிப்பிடப் படும் மூர்த்தியை தியானம் செய்துகொண்டே மந்த்ர ஜபம் செய்யவேண்டும் என்பது விதி. அப்படி மூர்த்தி தியானத்தோடு கால அளவு, உச்சரிப்பு முறை (சந்தஸ்) யறிந்து ஜபிப்பதால் உண்டாகும் சூக்ஷ்ம சலனங்கள் அம்மூர்த்தி யைநேயம் அகக்கண்ணுக்கு முன்னால் கொண்டுவரும். இதற்குத்தான் உபா ஸனை என்று பெயர். அதாவது மூர்த்தி தியானமும் மந்த்ரஜபமும் சேர்ந்ததே

உபாஸனையாகும். இதனை அறிவிக்க குரு அவசியம். இருந்தாலும் சிவ என்ற சொல்லே மிக மஹிமை வாய்ந்தது. அது இறைவன் நாமாவுமாயிற்று. அவனை யடைய ஹேதுவான மந்த்ரமும் ஆயிற்று. ஸ்ரீதர அய்யாவாள் சிவ ஆக்யா ஷஷ்டி என்று 60 சுலோகங்களில் சிவ நாம மகிமையைக் கூறுகின்றார். அதில் சி. வ. என்ற இரண்டு எழுத்துக்களை அவ்யாஜமாக ஒரு முறை சொன்னாலும், சொல்லவேண்டுமென்று நினைத்தாலும் கூட ஸகல பாபங்களும் நசித்துப் போகின்றன என்று சொல்லியிருக்கிறார். மானிட ஜன்மா எடுத்த ஒவ்வொரு வரும் சிவதரிசனமும், சிவன் கோயில் பிரதக்ஷிணமும், பஞ்சாக்ஷர ஜபமும் செய்து வரவேண்டியதவசியம்.

"அஞ்செழுத்தே ஆகமமும் அண்ணல் அருமறையும்
அஞ்செழுத்தே ஆதிபுராணம் அனைத்தும்—அஞ்செழுத்தே
ஆனந்த தாண்டவமும் யாவைக்கும் அப்பாலாம்
மோனந்த மாமுத்தியும்."

சுபம்



# "பிள்ளையார் பெருமை"

பாவைப்ரவசன பூஷணம் என். எஸ். தாத்தாச்சாரி,
தஞ்சை.

---

பாலும் தெளி தேனும் பாகும் பருப்பு மிவை
நாலும் கலந் துனக்கு நான் தருவேன்—கோலஞ்செய்
துங்கக் கரி முகத்துத் தூமணியே நீ எனக்கு
சங்கத் தமிழ் மூன்றும் தா!

மிகப் பழங்காலம் தொட்டு ஆன்ம அறிவிலும், தெய்வபக்தியிலும் நம் பாரத நாடு பெருமை பெற்று விளங்குகிறது· இத்தகைய பாரத நாட்டில் கோவில்கள் நிரம்பி உள்ள பகுதி தென்னுடுதான். இங்குத்தான் மூர்த்தி, தலம், தீர்த்தம் என்ற இம் மூன்றுக்கும் சிறப்பு அதிகம். உருவ வழிபாடு (அர்ச்சை) தமிழ் நாட்டில் நாயன்மார், ஆழ்வார்கள் காலத்தில் தான் ஓங்கிற்று எனலாம். இதிஹாஸங்களில் தென்னுட்டுக் கோவில்களைப்பற்றிய பேச்சு அதிகம் இல்லை. ஆனல் தென்னுட்டுக் கோவில்களின் ஸ்தலபுராணங்களில் மிகப்பழைய கதைகள் சம்பந்தப்பட்டிருக்கின்றன. எதுவாயினும் உந்நதமான கோபுரங்களும், அழகான சிற்பங்களும் கொண்ட பெரிய ஆலயங்கள் தமிழ் நாட்டின் அழியாச் சின்னமாக விளங்குகின்றன. எங்குச் சென்றாலும் கோவில்கள் தான். இக் கோவில்களுக்குள் மிக அதிகமானது பிள்ளையார் கோவிலும், அநுமார்கோவிலும் தான். இவர்களுடைய கோவில்கள் மிகவும் சிறியவைகள் தான். ஆற்றங்கரை களிலும், மரத்தடிகளிலும் இவர்களை தர்சிக்கலாம். இவர்கள் இருவர்களும் பிர்மச்சாரி தேவதைகளானபடியால் கண்கண்ட தெய்வமாக விளங்குகிறுர்கள் என்பர் சிலர். புராணங்களில் சிலவற்றில் பிள்ளையாருக்கும் மனைவிகள் உண் டெனக் கூறி இருக்கிறது. பிள்ளையார் ஏழைகளின் தெய்வம், நாட்டில் தெய்வ பக்தி வளர்வதற்கு இவரே முதல் காரணம் எனலாம். தமிழில் பிள்ளையார் என்ற சொல்லிற்கு சிறந்த பிள்ளை என்று பொருள். திருமால் பாதி சிங்கமும் பாதி மனிதனுகவும் தோன்றியது போல், இவரும் பாதி யானையாகவும் பாதி மனித னுகவும் காட்சி அளிக்கிறுர். இந்தியா முழுவதிலும் பிள்ளையார் வழிபாடு உண்டு. இவரை "விநாயகர்" என்றும் கூறுவார்கள். விநாயகர் என்ற சொல்லிற்கு இவருக்கு மேம்பட்ட தலைவர் இல்லை என்றும், சிறந்த தலைவர் என்றும் ஒருவாறு பொருள் கூறலாம். யானைமுகத்துடன், நுனியில் ஒடிந்த

தந்தத்துடன், இடது கையில் கொழுக்கட்டையுடன், மூஞ்சூறு வாகனத்துடன் எங்கும் தோன்றும் உருவமாகத் திகழ்வார். இவர் உருவத்தை ஓங்கார ரூபமாகக் கூறி "பிரணவ கணபதி" என்றும் இவரை அழைப்பதுண்டு. இவரை பரம்பொருளாய் உபாசிக்கும் காணுபத்யமதத்தைச் சார்ந்தவர்கள் மும் மூர்த்திகளுக்கும் மேம்பட்ட முழு முதற் கடவுள் என்றும் கூறுவார்கள். சிவபெருமானுடைய மூத்த பிள்ளையான பிள்ளையார் அந்த முழு முதற் கடவுளின் கார்ய ப்ரஹ்மம் என்பார்கள். அவருடைய பெரிய வயிற்ருல் எல்லா அண்டங்களை அவர் உள்ளே தரித்திருக்கும் தன்மை வெளிப்படுகிறது. இவர் எளிதில் சந்தோஷப்பட்டு இஷ்ட சித்திகளைத் தரக்கூடியவர். சிறிய ஜந்துவான மூஞ்சூற்றின் மேல் இவர் அமர்ந் திருப்பதால் இவ்வளவு பெரிய சக்திவாய்ந்த இவர் மூஞ்சூறு போன்ற சிறியவர்களையும் சுமைதராமல் காப்பாற்றக்கூடியவர் என்ற உண்மை வெளியாகிறது. சிவன் கோவில்களில் கன்னி மூலையில் (தென் மேற்கு) விநாயகருடைய கோவில் அமைந்திருக்கும். இவர் முன்பு இடக்கை வலக்கைகளை மாற்றி மண்டையில் குட்டிக்கொண்டு, இடக்கையால் வலது காதையும், வலது கையால் இடது காதையும், பிடித்துக்கொண்டு மூன்று முறை தோப்புக்கர்ணம் போட்டு வணங்கி சதுர்த்தேங்காய் உடைப்பது பழக்கம். தாங்கள் செய்த குற்றங்களுக்குத் தாங்களே தண்டனை விதித்துக்கொள்வதைக் குறிப்பதற்காகவே குட்டுப்போட்டுத் தோப்புக்கர்ணம் போடும் பழக்கம். தங்களுடைய பாபங்கள் உருண்டு திரண்டு தேங்காய் போல இருப்பதால் அவைகளை உடைப்பதாகக்கருதி சதுர்த்தேங்காயை உடைக்கிருர்கள். சிவபெருமானுடன் சம்பந்தப்படுத்தியும் இந்தப் பழக்கத்தை விளக்குவார்கள். இவருக்குக் கணேசர் என்றும் மற்ருேர் பெயர் உண்டு. மஹாபாரதத்தில் கணங்களுக்கு (மக்களுக்கு) இறைவன் என்றும் ப்ரமத கணங்களுக்கு (இடையூறு விளைவிக்கும் சக்திகளின் கூட்டம்) இறைவன் என்றும் இவரைப்பற்றிக்கூறி இருக்கிறது. இவர் ஸகல மங்கலத்தையும் தருவதால் இவரை 'சம்பு' என்றும் மஹாபாரதம் கூறுகிறது. வியாசர் மகாபாரதம் எழுத இவரை நினைத்ததாகவும், அப்பொழுது தன்னுடைய வலதுபக்கத்துத் தந்தத்தை முறித்து அதை எழுத்தாணியாகவைத்து மஹாபாரதத்தை எழுதினர் என்றும் புராண வரலாறு உண்டு. ப்ரஹ்மவைவர்த்த புராணத்தில் தோன்றும் பொழுது இவர் மேல் சனீசுவரன் பார்வை பட்டதால் தலையை இழந்தார் என்றும் பிறகு விஷ்ணுவானவர் யானையின் தலையைக்கொண்டு வந்து இவர் தலையாக அமைத்தார் என்றும் கூறுகிறது. வராஹ புராணத்தில்— அசுரர்களின் தொந்தரவு தாங்காத தேவர்களும், ரிஷிகளும் சிவபெருமானிடம் வேண்டிக்கொண்டார்கள். சிவபெருமான் அவர்களுக்கு அருள் செய்ய எண்ணிப் பார்வதியை உறுத்துப் பார்க்கவே பிள்ளையார் தோன்றினர். ஆனல் அவருடைய உக்ரஸ்வரூபம் எல்லோரையும் அச்சப்படுத்தியது. அதற்காகச் சிவபெருமானே யானையுடன் கூடிய தலை ஏற்படவேண்டும் என்று சபித்தார்.

யானைக்குக் கண்ணில் எப்பொழுதும் சாந்தி நிலவுவது போல் இவருக்கும் சாந்தி இருக்கவேண்டும் என்றே அவ்வாறு சபித்தார். இருந்தும் அவருடைய அளவிலா சக்தி குறையாதிருக்கவே தேவர்களுக்கும், கணங்களுக்கும் அவரைத் தலைவர் ஆக்கினர். மேலும் எந்தக் கார்யம் தொடங்கினாலும் அவரை வழி பட்டால் அக்கார்யம் நன்றாக நிறைவேறும் என்று அருள் தந்தார் என்றும் கூறி இருக்கிறது. "சாரதாதிலகம்" என்ற நூலின்படி ஐம்பத்தொன்று கணேசரின் பிரிவுகள் இருப்பதாகத் தெரியவருகிறது. அந்த ஐம்பத்தொன்று கணேசர்களுக்கும் ஐம்பத்தொன்று சக்திகள் உண்டெனவும் அறியப்படுகின்றது. வாஹினீ புராணத்தில் ப்ரமத கணங்கள் யாவருக்கும் விநாயகர் என்றே பெயர் என்று கூறப்பட்டிருக்கிறது. ருக் வேதத்தில் புத்திமான்களுக்கெல்லாம் புத்திசாலியாக இவர் வர்ணிக்கப்பட்டிருக்கிறார். இவரே விகடம் என்ற கலை யின் அதிஷ்டான தேவதை என்பார்கள். இவருடைய திவ்ய நாமாக்களில் "விகடர்" என்பதும் ஒன்று உண்டு. இவருடைய வழிபாடு 'பூனா'வில் அதிக மாக உண்டு. ஆதிசங்கரர் சௌரம், சாக்தம், வைஷ்ணவம், சைவம், காணபத்யம், சுத்தாத்வைதம் என ஆறு மதங்களை ஸ்தாபித்தார். அவைகளில் சௌரம் என்ற மதம் பெரும்பாலும் மறைந்துவிட்டது. காணபத்யம் மட்டும் மகாராஷ்ட்ரத்தில் உலவிவருகிறது. பஞ்சாயதன பூஜையில் முதல்ஸ்தானம் வகிப்பவர் இவரே. இவரே சரீரத்தில் உள்ள மூலாதார சக்ரத்தில் அமர்ந் திருப்பார். இவரை நிஷ்கலர், கைலர் என்றும் இரண்டு நிலையில் வைத்து உபாசிப்பது வழக்கம். பரம்பொருளான விராட் கணபதி என்பவர், சிந்தாமணித் தீவில், சடர்ணபட்டணத்தில் ஸ்வானந்த பவனத்தில் சித்தாமணி மண்டபத்தில் ஏகாக்ஷரபீடத்தில் சித்தி, புத்தியுடன், அவ்யக்த கணபதி என்றும், மஹா வாக்ய கணபதி என்றும், ஹம்ச கணேசர் என்றும், வரதர் என்றும், விகடர் என்றும் ஸ்வரூபாதிஷ்டானத்துடன், இருக்கிறார் என்பார். இவருக்கு பூனா ஜில்லாவில் மோர்கம் என்ற மயூரேசத்தில் பிரஸித்தி அதிகம். அதர்வ வேதத் தில் இவருடைய மற்றோர் மூர்த்தமான உச்சிஷ்டகணபதியைப் பற்றி விஸ்தார மாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அஷ்டாங்கஹ்ருதயம் என்ற வைத்யநூலில் இவரை உபாஸிப்பதால் குஷ்டம் என்னும் நோய் குணமாகும் என்றும் கூறப் பட்டிருக்கிறது. ருக்மாங்கத மகாராஜனுக்கு இவர் அருளால் தான் குஷ்ட ரோகம் தீர்ந்தது. பேய் பிடித்தவர்களின் வேதனை இவர் உபாஸனையில் நீங்கும் என்றும் வைத்ய நூல்களில் கூறப்படுகின்றன. முத்கல புராணத்தில் சிவபெருமான் கணபதியின் பெருமையை விஸ்தாரமாக எடுத்துரைத்ததாகக் கூறப்பட்டிருக்கிறது. இராவணனுக்கும் பிள்ளையாருடைய அருள் பலம் அதிகம் உண்டு. விநாயக புராணத்தில் கைலாசத்தை இவர் பந்தாக உருட்டி விளையாடினதாகக் கதை உண்டு, இவருக்கு மயில், சிங்கம், மூஞ்சூறு முதலிய

வாகனங்கள் உண்டென்றும் அவைகளுக்குப் பல கதைகள் உண்டென்றும் விநாயக புராணம் முதலிய நூல்களில் கூறப்பட்டிருக்கிறது. அருகம் புல்லால் பூஜை, ஹோமம் செய்தால் இவருக்கு மிகவும் மகிழ்ச்சி ஏற்படும் என்பார்கள், இவரை வெளுப்பு, சிவப்பு, மஞ்சள் கலந்த புகை நிறம், பழுப்பு நிறம் முதலிய நிறங்களில் பூஜை செய்வார்கள் - உபாஸிப்பார்கள். ஸ்காந்தபுராணத்தில் இவருக்கு எலி வாகனம் ஏற்பட்டதின் வரலாறு இவ்வாறு கூறப்பட்டிருக்கிறது. மகரிஷி சௌபரியின் மனைவி தனது ஆசிரமத்தில் தனியாக இருந்தாள். அப்பொழுது க்ரௌஞ்சன் என்ற அசுரன் அவளிடம் தவருக நடக்க எண்ணினன். ரிஷியின் மனைவி கூச்சலிட்டாள். அதைக்கேட்டு ஓடி வந்தார் முனிவர், செய்தியை உணர்ந்தார். "நீ திருட்டுத்தனமாக ஓடிவந்து இவ்வாறு தகாத கார்யம் செய்தபடியால் எலியாகப் போகக்கடவது" என்று சபித்தார். அந்த அரக்கன் முனிவரின் காலில் விழுந்து மன்னிப்புக்கேட்டான். பிள்ளையார் அருளால் நன்மை ஏற்படும் என சாப பரிஹாரம் கூறினர். எலியாக மாறிய அந்த அசுரன் பராசர முனிவருடைய ஆசிரமத்தில் நுழைந்து பல இன்னல்களை செய்தான். பராசரர் இந்த இன்னலைப்போக்க வழிதெரியாமல் இருக்க பிள்ளையார் அருளால் எலி அசுரன் அடக்கப்பட்டான். கடைசியில் அவனையே வாகனமாகக்கொண்டார்" என்பது கதை.

மற்றும்—விசுவகர்மா என்பவனல் பாற்கடல் நடுவே அமைக்கப்பட்ட ரத்ன மண்டபத்தில் நீலாஸரஸ்வதியுடன் அமர்ந்திருக்கிருர். முன்பு தேவாஸுரர்கள் அமுதத்தைக் கடையும் பொழுது விஷம் உண்டாயிற்று. எல்லோரும் நடுங்கினின்றுர்கள். உடனே தேவகுரு ப்ரஹஸ்பதியானவர் விக்னேசுவர பூஜை செய்யாமல் நாம் பாற்கடலைக் கடைந்தபடியால் இந்த இடையூறு ஏற்பட்டது. அவரை மறுபடியும் பூஜிப்போம் எல்லாம் நன்மையாக முடியும் என்றுர். அப்படியே தேவர்கள் செய்யவே பிள்ளையார் அருளால் சிவபெருமான் விஷம் உண்டார், பிறகு அமுதமும் ஏற்பட்டது என்ற விநாயக புராணக்கதையும் உண்டு.

மற்றும் நம் பழம் தமிழ்ச்சங்க நூல்களில் பிள்ளையாரைப்பற்றிப் பேசப்படாத நூல்கள் மிக அரிது என்று கூறலாம். விநாயகர் செந்தாமரையில், பத்மாசனத்தில் நான்கு கைகளுடன் ஒவ்வொரு கையிலும் கொம்பு. பாசம், அங்குசம், மாம்பழம் இவைகளுடன் காட்சி தருவதாக அபிதான சிந்தாமணி கூறுகிறது. மற்றும் பல நூட்களில் சிவபெருமான் முப்புரம் எரிக்கப் புறப்படும் பொழுது பிள்ளையார் பூஜை செய்யாததால் தேர் அச்சு முறிந்து சிறிது திகைத்தார் என்றும், முருகன் பிள்ளையார்பூஜை செய்யாததால் வள்ளியை மணக்கச்சென்றபொழுது இடையூறு பெற்றுர் என்றும் கூறப்பட்டிருக்கிறது. இந்திரன்முதல் கச்யபர் வரை 21 பேர்கள் விநாயகபூஜை செய்து சித்தி அடைந்

தார்கள். சிவபெருமானும் அம்பாளும் நந்தவனத்தில் கலை அரங்கில் எழுதி இருந்த ஆண், பெண் யானைகளைப்பார்க்க அவற்றினின்றும் யானைமுகத்துடன் பிள்ளை தோன்றியதாகவும் கதைகள் உண்டு. கஜமுகாசுரனைக்கொல்லவே தனது வலப்பக்கத்துக்கொம்பை முறித்து அடித்தார் என்றும் பிறகு அந்த கஜமுகா சுரன் அவருக்கே அடங்கி வாகனமாக மாறினன் எனவும், அந்த ஒடிந்த கொம்பையே தன்கையில் பிள்ளையார் வைத்துக்கொண்டிருப்பதாகவும் கதைகள் உண்டு. தக்ஷன் செய்த யாகத்தில் விநாயகருடைய கண்ணிலிருந்து சுவேத பிந்து விழவே, அதிலிருந்து அக்னி உண்டாயிற்று. அக்னியில் இருந்து பூதம் உண்டாயிற்று. அந்தப் பூதம் தக்ஷயாகத்தை அழித்துச் சிவபெருமானுக்கு உதவிற்று என்றும் கதை உண்டு. இவருடைய மூர்த்தங்கள்—ஸுமுகர், ஏகாந்தர், கபிலர், கஜகர்ணிகர், லம்போதரர், விகடர், விக்னராஜர், கணதிபர், தூமகேது, கணத்யக்ஷர், பாலசந்திரர், கஜானனர், வக்ரதண்டர், சூர்பகர்ணர், ஹேரம்பர், ஸ்கந்தபூர்வர், என 16 வகைப்படும். இவருடைய மனைவிகளாகக் கூறப்பட்ட மூர்த்தங்கள் 1. சித்தி 2. புத்தி 3. வல்லபை 4 மோதை 5 ப்ரமோதை 6 ஸுமுகை 7 ஸுந்தரீ 8 மனோரமா 9 மங்கலா 10 கேசிநீ 11 காந்தா 12 சாருகாசா 13 ஸுமத்யமா 14 நந்தினி 15 காமதா எனப்படும்.

தமிழ் மூதாட்டி ஔவையின் ப்ரத்யக்ஷ தெய்வம் விநாயகரே. ஔவை ஒரு திருமணத்திற்காக மூவேந்தரை அழைக்க ஓர் ஓலை எழுத விரும்பினர். பிள்ளையாரை ஔவை நினைக்கவே எதிரே தோன்றினர், உடனே

"ஒரு கை இரு மருப்பு மும்மதத்து நால் வாய்க்
கரி யுரி வைக் கங்காளன் செம்மல்—கரிமுகவன்
கண்ணுலவோலை கடிதெழுத வாரானேல்
தன்றூண்மை தீர்ப்பேன் சபித்து"

எனப்பாட விநாயகர் எழுதி ஓலை யிட்டாராம்.

இந்த ஔவையார் விநாயக பூஜை செய்துகொண்டிருந்தார். அதற்குள் சுந்தரமூர்த்திநாயனர்கைலாசத்திற்குப் புறப்பட்டுவிட்டார். அவருடனே செல்ல வேண்டும் என்ற எண்ணத்தால் பூஜையை மிக விரைவில் செய்தார். ஔவை யார் முன்பு விநாயகர் தோன்றினர். அவசரப்படாமல் பூஜை செய் நானே உன்னை கைலாயத்திற்கு அவர்களுக்கு முன்பு சேர்க்கிறேன் என்றார். உடனே "சீதக்களபம்" என்னும் விநாயகர் அகவல் பாடினர். முடிவில் சுந்தரமூர்த்தி நாயனருக்கு முன்பே தமது துதிக்கையால் ஔவையாரை எடுத்துக் கைலாயத் தில் அமரவைத்தார். மற்றவர்கள் ஔவையைப் பார்த்து எங்களுக்கு முன்பு தாங்கள் எப்படி வந்தீர்கள் எனக் கேட்க,

மதுரமொழி நல்லு மையாள் சிறுவன் மலரடியை
முதிரநினைய வல்லார்க்கு அரிதோ முகில் போன் முழங்கி
அதிரவருகின்ற யானையும், தேரும், அதன் பின் சென்ற
குதிரையும் காதம் கிழவியும் காதங் குலமன்னனே!

எனக் கூறி, பிறகு சிவதர்சனம் செய்து மகிழ்ந்தார் என்று அபிதான சிந்தாமணி கூறுகிறது. இவரே "விநாயகர் அகவல்" என்ற அருமையான நூலை இயற்றினர். இவ்வாறு எல்லாவிதமான இஷ்ட சித்தியையும் தரக்கூடிய கலியுக ப்ரத்யக்ஷ தெய்வம் இவர் என்பதில் சந்தேகமில்லை. மஹாபாரதத்தில் "கலௌ துர்கா விநாயகர்" கலியுகத்தில் துர்கையும் விநாயகரும் கண்கண்ட தெய்வங்கள் என்றும் கூறப்பட்டுள்ளது. "பிள்ளையாரை நினையாதகார்யம் சள்ளையாக முடியும்" என்ற பழமொழி முற்றிலும் உண்மையே. அருள்வடிவமான இவரை வழிபட்டு எல்லா நன்மைகளையும் பெறுவோம். பிள்ளையாரைப்பற்றியப் பல கதைகள் மாறுபட்டு கூறப்படுகின்றனவே, என்ற சந்தேகத்தைச் சிலர் எழுப்பலாம். உலக ச்ருஷ்டியில் எத்தனையோ யுகங்கள் மாறுபட்டுச் சுழன்றுகொண்டிருக்கின்றன. ஆகவே பலகல்பங்களில் பற்பலவிதமாக நடந்த சரிதைகள் இவைகள் என்று துணியவேண்டும்.

1. விநாயகரை ஆவணிமீ கிருஷ்ணபக்ஷம் சதுர்த்தியில் பூஜிப்பது வழக்கம். அதற்கு விநாயக சதுர்த்தி விரதம் என்று பெயர்.

2. வைகாசிமீ சுக்கிலபக்ஷம் முதல் வெள்ளிக்கிழமை தொடங்கி ஒவ்வொரு வெள்ளிக்கிழமை தோறும் விநாயக மூர்த்தியை வழிபட்டால் தீராத நோய்களும் போகும் என்பார்கள் இதற்கு விநாயக விரதம் என்பார்கள்.

3. கார்த்திகைமீ கிருஷ்ணபக்ஷம் பிரதமை முதல் மார்கழிமீ சுக்ல பக்ஷம் ஷஷ்டி முடிய 21 நாட்கள் நூலிழை காப்பை ஆண் வலக்கையிலும் பெண் இடக்கையிலும் அணிந்து விரத முடிவுசெய்வதும் உண்டு. இதற்கு விநாயக ஷஷ்டி விரதம் என்று பெயர். இன்னும் பல விரதங்களும் உண்டு. முடிவாக எல்லோரும் வழிபடும்படியான ஏழைகளின் தெய்வம் பிள்ளையாரே! அவரை நாள் தோறும் சிந்தித்திருப்பார்களுக்கு எந்த இடையூறும் சுலபமாகத் தீர்ந்து இன்பம் பெறுவார்கள்.

பிள்ளையார் துணை.

# தொண்டர்தம் ஆண்மையும், ... ... ... ... ... ... வளவனூர் பெருமையும்

சைவப்பேராசிரியர் **N. சுப்பையா பிள்ளை, M. A.**
*தமிழ்த்துறைத் தலைவர், அரசர் கல்லூரி,*
சிவகங்கை.



தெய்வச் சேக்கிழார் இயற்றிய பெரிய புராணத்தில் நாம் பல்வேறு வகையான தொண்டர்களைப் பார்க்கிறோம். இத்தொண்டர்களை, வன்றொண்டர்களென்றும் மென்றொண்டர்களென்றும், இரண்டு பெரும் பிரிவாகப் பிரிக்கலாம். அடியவர் என்பவரெல்லாம் கோழைகள் என்றும், வீரமில்லாதவர்களென்றும், அறியாமையாற் சிலர் கூறுவதை நாம் கேட்கிறோம். வீரம் மிகுந்த பல அடியவர்களைப் பெரிய புராணத்திற் கண்டு களிக்கலாம். உலகியலைக் கடவாது, விதிப்படி சிவ பூசை, அடியார் பூசை செய்தொழுகுவது மென்மை பக்தியென்றும், உலகியலைக் கடந்து, சிவபெருமானுக்கும் அடியவர்களுக்கும் இடையூறுற்றவிடத்து தன்னுயிருக்கும் அஞ்சாது அவ்விடையூற்றை நீக்குவதை வன்மை பக்தியென்றும் பெரியோர் கூறுவர். இவ்விரண்டு விதமான பக்தியிற் றிளைத்த, அடியவர்களின் வியத்தகு செயலை இக்கட்டுரையிற் கண்டு மகிழ்வோம்.

பழம்பதியான கருவூரை, புகழ்ச்சோழன் என்னும் பெருமை சான்ற மன்னன் ஆண்டு வந்தான். இவன் நிறைந்த சிவபக்தன். இவ்வள நகரில், ஆனிலையென்னும் திருக்கோவில் உளது. இத்திருக்கோவிலில் வீற்றிருக்கும் சிவபெருமானைச் சிவகாமியாண்டார் என்னும் புண்ணிய முதல்வர் நாளும் பூமலர் சாத்தி வழிபட்டு வந்தார். இவ்வந்தணர் பெருமானின் பூத்தொண்டின் சிறப்பினைச் சிறிது பார்ப்போம்.

சிவகாமியாண்டார், புலர்வதன் முன், துயிலொழிந்து, எழுந்து போந்து, தூய நீரில் மூழ்கி, வாயுங்கட்டி, இறைவனது இன்ப அன்பையே எண்ணிக் கொண்டு, நந்தவனத்திடைப் புகுந்து, கையால் தொட்டுப்பார்த்து, வண்டு மூசுவதற்கு ஓரிமைப்பொழுது முன்னர்ப் போதாய் நிற்கும் முகையினைப்பறித்து, கோலப்பூங் கூடையில் அன்பே நிறைவதுபோல் நிரப்பி, காலையில் சிவபெருமானுக்குத் திருமாலை கட்டிச் சாத்துஞ் சமயத்து உதவுதற்காக, நாளும் திருக்கோவிலுக்குச் செல்வது வழக்கம்.

ஒரு நாள் இவ்வந்தணர் பெருமான், காலையில் பூக்குடலையோடு, கோவிலுக்குச் செல்லுங்காலத்து, புகழ்ச்சோழனின் "பட்டவர்த்தனம்"

என்னும் பட்டத்துயானை, மதம்பிடித்து, கடல்போல் முழங்கி பாகர்களுக்கு மடங்காது, வீதியில் வந்து, இப்பெரியாரின் தண்டினிடத்துத்தொங்கும் திருப் பூங்கூடையைப் பிடித்துப், பறித்துப், பூக்களை யெல்லாம் தரையிற் சிந்தியது. நல்லகாலமாக இந்தயானை, திருத்தொண்டருக்கு யாதொரு தீங்கும் செய்யாது, அப்பாற்சென்றது. சிவபெருமான் திருமுடிக்குச் சாத்தும் மலர்களை யானை தரையிற் சிந்தியது கண்டு மிக வருந்தினர் சிவகாமியார். "ஆறும், மதியும், அணியும் சடைமேல் ஏறும் மலரைக் கரிசிந்துவதோ" என்று சொல்லிக் கண்ணீர் வார்த்துக் கதறினர்.

கருவூரில் வாழும். வன்றொண்டராகிய எறிபத்தர் சிவகாமியாண்டாரின் கூக்குரலைக்கேட்டு அவ்விடத்திற்கு விரைந்து வந்தார். நடந்த செய்தியை சிவகாமியாண்டார் கூறக்கேட்டு மிகச் சினத்துடன். "அடியவர்க்குத் துன்பம் செய்த வேழம் இனி பிழைப்பதெப்படி" என்று கூறி, தூய மழுவைச்சுழற்றிக் கொண்டு யானை செல்லும் வீதிக்கு விரைந்து சென்றார். வேழத்தைக்கண்டதும், மிக்க வெகுண்டு, அதன்மேற் பாய்ந்தார். எரிகின்ற கோபத்தீயைக் கக்கும் கண்களையுடைய யானையானது, மாறுபட்டு அடியவரைக்கொல்ல ஓடியது. அன்பர்களுக்குத் துன்பம் நேரிட்டுழி, தன்னுயிர்க்கு இறுதி வரினும், அது கருதாது, அவர்கள் துன்பத்தைப்போக்குவதே, விரதமாகக்கொண்ட, எறிபத்தர். தன்னுயிர்க்கஞ்சாது தன்மழுவால், யானையின் துதிக்கையை வெட்டி வீழ்த்தினர். கையினைத் துணித்தபோது, மைவரையனைய வேழம், கடலெனக் கதறி வீழ்ந்து மாய்ந்தது. யானையைக் கொன்றதோடு நில்லாது, யானைப்பாகர் ஐவரையும் கொன்று மகிழ்ந்தார். நாயனுருக்குத் தப்பிப்பிழைத்த வேறு பாகர்கள், ஓடிச்சென்று புகழ்ச்சோழனின் வாயிற் காவலரை நோக்கி "பட்டவர்த்தனமும் பட்டுப் பாகரும் பட்டார்" என்று கூறினர். வாயிற் காவலரும் விரைந்து சென்று இச்செய்தியை அரசனுக்கு உணர்த்தினர்.

அரசனும் நாற்படை சூழ, களிற்றொடும், பாகர் வீழ்ந்த படுகளம் சென்றடைந்தான். இறந்த யானையின் பக்கலில், மன்றுளென்றும் நிருத்தமே பயிலும் வெள்ளிக்குன்றவர் அடியாராகிய எறிபத்தர் நிற்பதைக்கண்டார். இக் கொலைச்செயலை எறிபத்தர் செய்யமாட்டாரென்று அரசன் நினைத்து "யானை யைக்கொன்றவர் யார்" என்று வெடிபட முழங்கினான். பக்கத்தில் நின்ற பணியாளர்கள், பட்டத்துயானையையும் பாகர்களையும் கொன்றவர், மழுப்படை யைக் கையிற்கொண்டு, யானையின் பக்கத்தில் நிற்கும் அடியவரே என்றனர். இதைக்கேட்ட அரசப்பெருந்தகை குணத்தின் மிக்க இந்நாயனர் "பிழைப்படி னன்றிக் கொல்லார்" என்று சொல்லிக்கொண்டு குதிரையினின்றும் இறங்கினர். அம்பலவாணர் அன்பராகிய இந்த மெய்யடியார் இத்தனைதூரம் கோபப்படுவ

தற்குத் தகுந்த காரணம் இருத்தல் வேண்டுமென்று அரசன் நினைத்து அஞ்சினன். இக்கேட்டிற்கெல்லாம் காரணம் தானென்று மிகக் கவன்று அவ்வடியவர் நிற்குமிடத்திற்கு, மிகப்பணிவுடன் சென்று "இறந்த இவ்யானை செய்த குற்றத்திற்குப் பாகரோடிதனை மாள எறிந்தது போதுமோ! ; அருள்செய்யும்" என்று தொழுது நின்றார். சிவகாமியாண்டார் சர்ப்பாபரணரான சிவபெருமானுக்குச் சாத்தும்படி கொண்டுவந்த பள்ளித்தாமந்தன்னை பறித்து, நிலத்திற் சிந்தியது இவ்யானை; இதனால் கோபங்கொண்டு இப்பட்டத்து யானையையும் பாகர்களையும் கொன்றேன்" என்று எறிபத்தர் கூறினர். இதனைக்கேட்ட அரசன் மிக நடுக்கெய்தி "மெய்த்தவத்தோரே! அங்கணடியார் தமக்குச் செய்த இவ்வபசாரத்திற்கு இங்கிவைதம்மாற்போதாது ; என்னையும் கொல்ல வேண்டும் ; தங்கள் கையிலிருக்கும் மங்கல மழுவாற்கொல்லுதல் தகுதியன்று; என் வாளினலே கொல்லும்" என்று சொல்லி தன் கையிலிருந்த வாளைக் கொடுத்தார். இவ்வாறு அரசன் கூறியதைக் கேட்டவுடன், எறிபத்தர் பதறினர். கண்ணீர் வடித்தார். "அந்தோ! இத்தனை அன்பருக்கு கேடு செய்து விட்டேன் ; கெட்டேன் கெட்டேன் சிவகாமியாண்டாருக்கு நேர்ந்த துன்பத்திற்காக நான் யானையைக் கொன்றேன், அரசரோ, அத்துன்பத்திற்கு மனம் பொருது தம்மையே கொல்ல வாளை நீட்டுகின்றுரே; என்னே! இவர் அன்பின் திறம்." என்று புலம்பினர். மீண்டும் சிந்தனை செய்தார். வாளை வாங்க மறுத்தால் அரசன் தன்னுயிரைத் தானே மாய்த்துக்கொள்வார் என்று நினைத்து, அரசன் கொடுத்தவாளை வாங்கினர். அரசனும் மிக்க மகிழ்ந்து தலை சாய்ந்து நின்றனர். எறிபத்தர் தாழாது அரசன் கொடுத்த வாளை தன் கழுத்திற் பூட்டி அரியத்தொடங்கினர். இது கண்டு சோழப்பெருந்தகை "என்னே! இது! என்னைக் கொல்வாரென மகிழ்ந்தேன்! இவரா கொலையுண்பது ; கெட்டேன்" என்று விரைந்து கிட்டி எறிபத்தரின் கையையும், வாளையும் இறுகப் பிடித்துக் கொண்டார். இங்ஙனம் மன மாற்றங்கண்ட இருவரும் அன்பின் பிடியிலே இணைக்கப்பெற்று விளங்கினர். இதுவே அருள் உலக வாழ்க்கை; கடவுட் பிணையல்; அன்பின் கூட்டு!

இந்நிலைக்குப் பின்னரும், அருளே வடிவான ஆண்டவன் சும்மா இருப்பானு! எல்லோரும் கேட்கும்படியாக விண்ணிலே "தொழுந்தகை அன்பின் மிக்கீர்! உங்கள் திருத்தொண்டின் சிறப்பினை உலகத்திற்குக் காட்டும்படியாக நாம் செழுந்திருமலரையின்று சினக்கரி சிந்தச் செய்தோம்" என்ற வாக்கு எழுந்தது. அதே சமயத்தில் இறந்தவர் யாவரும் உயிர்பெற்றெழுந்தனர். எறிபத்தர் தம் கழுத்தில் ஈரப்பூட்டிய வாளை வீசி எறிந்துவிட்டு, சோழர் பெருமான் காலில் வீழ்ந்தார். சோழரும் அடியார் காலில் விழுந்தார். மாறிலா மகிழ்ச்சியில் மலர்ந்தார், மலரும் பூக்கூடையில் நிறைந்தது.

சிவகாமியாண்டார் பூக்குடலையை எடுத்துக்கொண்டு, இறைவனுக்குப் பூத்தொண்டு செய்வதற்கு விரைந்து சென்றார். எறிபத்தர், புகழ்ச்சோழனைப் பட்டத்து யானை மீதேறிச் செல்லும்படி வேண்டினர். அரசனும், மன்றிலாடும் பெருமானை வழுத்திக்கொண்டு திருவளர் கோவில்புக்கான். எரிமலைபோன்று நின்ற எறிபத்தரும், பனிமலைபோல் உள்ளங்குளிர்ந்து நின்றார்.

மூன்று சிறந்த அடியார்களின் திருத்தொண்டினை இக்கட்டுரை வாயிலாகத்தெரிந்துகொண்டோம். சிவகாமி ஆண்டாரின் பக்தி மென்மையான பக்தி, உலகத்தோடு இயைந்த பக்தி, இவரை மென்றொண்டர் என்று அழைக்கலாம். பூவினை இழந்தபோது இவர் இறைவனை நோக்கிப் புலம்பியது யாவர் உள்ளத்தையும் உருக்குவதாயிருக்கிறது. "ஆறும் மதியும் அணியும் சடைமேல் ஏறும் பூவைக்கரி சிந்துவதோ" என்று வருந்தி யழுதனர். இனி எறிபத்தரின் அன்பைப் பார்ப்போம். அடியாரிடம் பூண்ட அன்பின் காரணமாகத்தான், எறிபத்தர் அரசனது பட்டத்துயானை யென்றும் பாராமல், தனது தூய மழுவினால் கொன்றார். யானையைக்கொன்றதோடு இவர் சீற்றம் நிற்கவில்லை. பாகர்களையும் கொன்றார். எரிமலைபோல் காட்சியளித்தார். புகழ்சோழனின் அந்தமிலா அன்பின் நிலையைக்கண்டவுடன், தன்னுயிரையே போக்க முற்படுகிறார். பட்டத்து யானையைக் கொன்றதை சேக்கிழார் பாராட்டவில்லை. வேழ வென்றியிலும் இவரது அன்பு ஒரு சிறிது வெளிப்படுகிறது. அன்பு நெறியினும் உயர்ந்த கடவுள் அன்பு நிலை உண்டென்பதையும், அத்தகைய உயர்ந்த நிலையை எறிபத்தர் எப்படியடைந்தார் என்பதையும் சேக்கிழார் தமது தெய்வீகப்பாடலில் நன்கு விளக்கிக்காட்டியிருக்கிறார். அன்பின் வளர்ச்சியை உயிரோவியமாகச் சேக்கிழார் அழகுறக்காட்டியது போல், வேறு யாராலும் காட்டமுடியாது. எறிபத்தர் தன்னுயிரைப் போக்கத் துணிந்ததை "ஆண்மை" என்று வியந்து பாராட்டுகிறார் சேக்கிழார். புலவர் பெருமானின் புந்திநிறை செந்தமிழின் சந்த இசையைப் பார்ப்போம்.

"ஆளுடைத் தொண்டர் செய்த வாண்மையுந் தம்மைக்கொல்ல
வாளினைக் கொடுத்து நின்ற வளவனார் பெருமை தானு
நாளுமற் றவர்க்கு நல்கு நம்பரதா மளக்கிலன்றி
நீளுமித் தொண்டினீர்மை நினைக்கிலா ரளக்கவல்லார்

எறிபத்தரின் பக்தி, உலகியலைக்கடந்த நிலை. இவரை வன்றொண்டர் என்று கூறலாம். இவ்வன்றொண்டரிடம் தெய்வீக அன்பு நெறியைக் காண்கின்றோம். நாயனாரும் செம்பியன் பெருமையை தம் திருவுள்ளத்திற்கொண்டு ஆனிலை அப்பருக்குச் செய்யும் திருப்பணியைக் குறித்துச்சென்றார்.

புகழ்ச்சோழனர் அன்பும் அளவிடற்பாலதன்று. புகழ்ச்சோழனரோ, “மன்றுள் என்றும் நிருத்தமேபயிலும் வெள்ளிக்குன்றவர் அடியார் இன்பத்திற்கு எதிர்நிலையாகத் தவறிழையார்” என்று உறுதியாக நம்புகிருர். இறைவனது இன்ப வடிவையே எங்கும் காண்கின்ருர். இன்ப அன்பை பெருது துன்பப்படினும் இன்ப அன்பே மிகுகின்றது. இவர் துன்பம்போக திருவருள் வாக்கே வந்து உதவுகிறது.

எறிபத்தர், புகழ்ச்சோழர், சிவகாமியாண்டார் என்ற இந்த மூவரின் அன்பு நிலைகளின் ஏற்றத்தாழ்வை நம்மால் அறிய முடியாது. எல்லாம் வல்ல ஆண்டவன் தான் இவர்களின் அன்பின் திறங்களை அறியமுடியும். சேக்கிழார் பெருமானும் “நீளுமித்தொண்டினீர்மை நினைக்கிலாரளக்க வல்லார்” என்று பாடிமுடிக்கிருர்.





சர் P. T. இராஜன் அவர்கள் யாகசாலை தரிசனத்திற்கு வருகை



அறநிலையத்துறை ஆணையருக்கு ஆலய மரியாதை செய்தல்.

# விட்டேனு பார்!

வித்துவான் P. S. தட்சிணுமூர்த்தி பிள்ளை
இந்து சமயச் சொற்பொழிவாளர்,
சிவகங்கை தேவஸ்தானம்.

"பொருள் இல்லார்க்கு இவ்வுலகம் இல்லை" என்பது வள்ளுவர் வாக்கு. அறம், பொருள், இன்பம் ஆகிய மூன்றில் நடுவிலுள்ள பொருளைப் பெருதவர், அறத்தையும் இன்பத்தையும் அடைய முடியாது என்ருர் ஓர் சமணமுனிவர். இல்லானை, இல்லாளும் வேண்டாள் என்ருல் அதன் ஏற்றத்திற்கு வேறு சான்றும் வேண்டுமோ? மக்கள் இவ்வுலகில் பொருளைப் பெறுதற்கு மேற்கொள்ளும் முயற்சிகளும், செயல்களும் எண்ணிலடங்கா, அப்பொருளைத்தேடியபின் வெள்ளத்தில் அழியாமல், வெந்தழலில் வேகாமல், கள்வரால் கவரப்படாமல் காத்தலும் மிகக் கடுந்துன்பமாக அமைகின்றது. கடன் வாங்கியவர் கண்ணியத்துடன் திருப்பிக்கொடுக்காமலிருந்தால் விட்டேனு பார்! என்று அவர் மீது வழக்குத்தொடுத்து வட்டியையும், முதலையும் வாங்குவதில் நாட்டம் செலுத்துகின்ருேம் வீட்டைக் கவர்ந்தாலும், விளைநிலத்தைக் கவர்ந்தாலும் ஆட்டைக் கவர்ந்தாலும், மாட்டைக் கவர்ந்தாலும் அவைகளை மீட்பதற்கு விட்டேனுபார்!, விட்டேனுபார்! என்று அலைகின்ருேம். காரணம் நம் வாழ்க்கை யென்னுஞ் சக்கரம் பொருளினுல் அல்லவா சுழல்கின்றது! நாம் மட்டும் என்ன! ஆண்டவனும் தன்னுடைமையைக் காத்துக்கொள்ள விட்டேனு பார்! என்று இவ்வவனியில் அலைந்திருக்கின்ருன்.

## மாண்புமிக்க மதுரை :

கண்ணுதற்பிரான் கயிலையை விடுத்துப் புண்ணிய வழுதியாய் வாழ்ந்த இடம் மதுரை. விண்ணவர் கோன் பண்ணிய பாவம் நீங்க இம்மண்ணில் வந்து மதியணிவேணியனை மலரால் அருச்சித்து வழிபாடு செய்த இடமும் மதுரையே. குன்றம் எறிந்த குமரவேளும், ஆலவாய் அவிர்சடைப் பிரானும் மன்றத்தமர்ந்து முத்தமிழை வளர்த்த இடமும் மதுரையேயாகும். அம்பலத்தாடும் பிரான் அடியார்க்கு எளியனுய் அறுபத்து நான்கு அருள் விளையாடல்களைச் செய்த இடமும் கூடல்மாநகரமே, தென்னவனுக வந்த சிவபெருமான் இம்மையிலே நன்மை நல்கும் இறைவா! என்றழைத்து இலிங்கத் திருவுருவை

அமைத்து வழிபாடு செய்த இடமும் மதுரைமா நகரமேயாகும். 'வைவை' என்னும் பொய்யாக் குலக்கொடியால் வளம் பெற்ற மதுரையின் மாண்புகளை முற்றவுரைக்கச் சிற்றறிவுடைய என்னால் இயலாது. சுருங்கக்கூறின் மிகப்பழங் காலத்திலிருந்து இன்றுவரை தோன்றிய தென்மொழி, வடமொழி நூல்களால் சிறப்பித்து ஓதப்பெற்ற ஒப்பற்ற நகரம் மதுரையே!

### தனபதி வணிகன் :

இந்நகரில் தனபதி என்னும் வணிகனொருவன் வாழ்ந்து வந்தான். பரஞ்சோதியார் வணிகரின் இயல்பைக்கூறும் பொழுது "சொல்லினும் இலாபங் கொள்வோர்" என்றார். மணிவாசகப் பெருமானும் ஓர் திருப்பாட்டில் வணிகரின் இயல்பை நன்கு விளக்குகின்றார். உயர்ந்த பொருளை மலிந்த விலைக்குப்பெற்று, மலிந்த பொருளை உயர்ந்த விலைக்கு விற்பது வணிகரின் இயல்பு. விண்ணவர்க்கு அரிய பொருளாகிய உன்னை நான் பெற்றுக்கொண்டேன். இம் மண்ணில் கடைப்பட்ட பொருளாய் விளங்கும் என்னை நீ அன்புடன் ஏற்றுக் கொண்டாய். ஒப்பற்ற பொருளாகிய உன்னைப் பெற்று நான் அடைந்த இன்பம் உரையிலடங்குமோ? என்னால் நீ அடைந்த பயன் யாது? இறைவனே! நம்மிருவரில் யார் சமர்த்தர் என்கின்றார். தனபதி வணிகர்களுக்குரிய இயல்பு நிரம்பப்பெற்றவனாய் தன் பெயருக்கேற்றபடி பெருஞ்செல்வத்திற்குத் தலைவனாய், சுசிலை என்னும் மாதரசியை மணந்து வாழ்ந்து வந்தான். தனத்திற்குப் பதியாக விளங்கியவன் ஓர் தனயனுக்குப் பதியாக விளங்கும் தன்மையை ஆண்டவன் அவனுக்கு அளிக்கவில்லை. "அளந்தன போகம் அவரவர் ஆற்றல்" என்ற ஆன்றோர் வாக்குப் பொய்க்குமோ? வணிகன் தனக்கு மைந்தனில்லாக் குறையைப் போக்கத் தன் தங்கையின் ஒரே புதல்வனைக்கூட்டுப் பிள்ளையாக ஏற்றுத் தன் மனைவிக்கு அளித்தான். சுசீலையும் புனைவனபுனைந்து மருகனைத் தன் உயிர் போலப் போற்றி வளர்த்தாள்.

### தவ வாழ்வு :

இவ்வாறிருக்க, வினைவயத்தால் வணிகன் மனைவிக்கும், தங்கைக்கும் சிறு பூசல் ஏற்பட்டது. வணிகனின் தங்கை "பிள்ளைப்பேறு அற்ற பாவிகளே! என்னருமை மைந்தனால் அல்லவா நீவிர் இம்மை, மறுமைப் பயன்களை அடையப் போகின்றீர்கள். இங்ஙனமிருக்கப் பெறுதற்கரிய பேறுபெற்றவர்களைப்போல் ஏன் பெருமைகொள்ளுகின்றீர்கள்" என்றாள். அவ்வார்த்தை இருவர் உள்ளத்தையும் அனலெனச் சுட்டது. உடனே அவர்கள் இவ்வவனி வாழ்வை வெறுத்துத் தம் அளவற்ற செல்வத்தையும் தம் வளர்ப்பு மகனுக்கு அளித்து மறு பிறப்பிலாயினும் மகப்பேறு அடையத் தவஞ்செய்வோம் என்று மதுரையை விட்டு நீங்கினர்.

### சிறகிழந்த பறவையானள் :

வணிகனின் தங்கை தமையன் அளித்த அளவற்ற செல்வத்தோடும் மைந்தனேடும் அவன் வளமனையில் வாழ்ந்துவந்தாள். இங்ஙனமிருக்க அவள் நல்வாழ்வைக் கண்டு பொறாமைகொண்ட வணிகனின் பங்காளிகள் வன்முறையில் செல்வங்களனைத்தையும் கவர்ந்துகொண்டனர். செல்வச்சிறப்போடு வாழ்ந்த வணிகப்பெண் தன் தமையனையும் பிரிந்து அவனளித்த செல்வத்தையும் இழந்து சிறுவனேடு சிறகை இழந்த பறவைபோல் வறுமையால் வாடினள்.

### திக்கற்றவர்க்குத் தெய்வமே துணை :

ஆதரவற்ற வணிகனின் தங்கை, தன் அருமை மைந்தனேடு ஆலவாய்ப் பிரான் திருக்கோவில்முன் நின்று இம்மையிலும் நன்மை நல்கும் ஈசனே! எங்கும் நிறைந்த ஏகனே! அறவோர் போற்றும் அருட்கடலே! கருத்திலா இச்சிறுவனையும், எளியாளையும் தாயத்தார் வருத்திப் புரிந்த செயல்களை நீ அறியாயோ? என்குல மாதரசியாகிய புனிதவதிக்கு அப்பனே! என் இடர் களையாயோ? அம்மையே வருகவென்று அப்புனிதவதியாருக்கு அருள்சுரந்த மெய்யனே! எம்குலத்தோன்றலே! இந்நகரில் நவமணிவிற்ற நாயகனே! எம் நலிவைத் தீர்த்தருளாயோ? என்று போற்றித் திருக்கோவில் முன்னர் அயர்ந்து கிடந்தாள்.

### அரசன்மேல் ஆணை :

அருட்கடலாகிய அண்ணல் அவள்கனவில் தோன்றி அம்மையே! வருந்தாதே. நீ பொழுது புலர்ந்ததும் உன் பொருளைக் கவர்ந்த தாயத்தார் இல்லத்தையடைந்து அரசன்மேல் ஆணையிட்டு அவர்களை அறங்கூறவைக்கு அழைத்து வருக, அஞ்சேல் என்று அருளி மறைந்தார். அதிகாலைப்பொழுதில் துயில் நீங்கிய வணிகப்பெண் சோமசுந்தரப்பிரானின் திருவருளை வியந்து துதித்து அத்தீமையாளர்களின் இல்லத்தையடைந்தாள். வன்முறையில் என்னுரிமைகளைக்கவர்ந்த வன்கணாளர்களே! அரசன் மீது ஆணையிட்டுக் கூறுகின்றேன் இப்பொழுதே அறங்கூறவைக்கு வாருங்கள். அவையோர் கூறியபடி என்னுரிமைப் பொருள்களைத் தந்தபின் அடுப்பில் நெருப்பை மூட்டுங்கள் என்றாள். அவள்கூறிய வார்த்தையைக்கேட்ட சிறுமதியாளர்கள் சினந்து அவளையும் அவள் மைந்தனையும் வைது நையப்புடைத்து அனுப்பினர். சிந்தை கலங்கிய அம்மாது தன் செல்வனேடு ஆன்றோர் வீற்றிருக்கும் அவையை யடைந்து அழுது புலம்பி நிகழ்ந்ததையுரைத்தாள். அவையோரும் அக்கொடுஞ் செயலாளர்களைக்கொண்டுவருக வெனப் பணிக்க ஏவலாளர் விரைந்து சென்று அவர்களை அழைத்து வந்தனர்.

வணிகனுய் வந்தவள்ளல்:

பிட்டு வாணிச்சியின் அன்பிற்குக் கட்டுண்டு மண்சுமந்த பெருமான் அக்குலத்தில் பிறந்த மற்றொரு பெண்ணின் துயரைப் போக்க மறப்பாரோ! விலையுயர்ந்த குண்டலங்கள் காதில் ஒளி வீசித்திகழ வரைபோன்ற தோள்களில் அழகிய பட்டாடை கிடந்தசைய மணிகள் பதித்த கண்டிகை மார்பில் விளங்க, மலர்போன்ற கரங்களிலுள்ள விரல்களில் நீல மணிபதித்த மோதிரம் மின்ன விருப்பு, வெறுப்பற்ற இறைவன் விருப்பையும் வெறுப்பையுங்காட்டும் திருமுகக் குறிப்பையுடையவராய்த் தனபதி வேடந்தாங்கி விட்டேனுபார் இவர்களை! என்று விரைந்துவந்து அவையையடைந்தார். பாசங்கடந்த பரஞ்சுடராகிய பரமன் தான்கொண்ட கோலத்திற்கேற்ப தன் தங்கையையும் மருகனையும் தழுவிக்கொண்டு ஐயோ! நீங்கள் இந்நிலையை அடைந்தீர்களே என்று அழுதான். அவிர்சடைப்பிரானைத் தன் அண்ணன் என்று எண்ணிய வணிக மாதும் அவள் மைந்தனும் அரனடியில் வீழ்ந்து புலம்பியழுதனர். துன்பம் அற்ற தூயோன் அன்புற்றவனைப்போல் நடித்து என் உயிர் அனையீர்! ஏன் அழுகின்றீர். நண்பர்களை வஞ்சித்து நாம் பொருள் தேடவில்லை, கொலைபுரிந்து பொருள் சேர்க்க வில்லை, இரப்போர்க்கு ஈயாமலும், வட்டி மேல் வட்டியிட்டு வஞ்சித்து வாங்கியும் நாம் வளத்தைப் பெருக்கவில்லை. அப்படியிருக்க நம் பொருள் அழியுமோ? மாசற்ற நம் பொருளைக் கவர்ந்தவரை எளிதில் விட்டேனு பாருங்கள் என்று விளம்பினர். ஆலவாயண்ணல் அவையோரை நோக்கி ஐயகோ! நான் என் மருகனுக்கு அணிவித்த ஐம்படைத்தாலியைக்காணேன். அழகிய முகச்சுட்டியைக்காணேன். மார்பில் சூட்டிய மதாணியைக்காணேன். என் உடைமையையெல்லாம் கவர்ந்தது போதாதென்று இச்சிறு பிள்ளையின் அணிகலன்களையும் கவர்ந்துகொண்டனரே! இது முறையாமோ? என்று முடிவில்லாத பரமன் முறையிட்டான். முது புலி போன்று நின்று முறையிட்ட இறைவனின் வார்த்தையைக் கேட்டஞ்சிய அவையோர் தம் அறிவு என்னும் துலாக்கோலில் இருவர் வழக்கையும் வைத்து அறிந்து தாயத்தார் வழக்குத் தகுதியற்றது எனத் தள்ளினர். தோல்வியுற்ற வணிகனின் பங்காளிகள் அவையோரே! இல்வாழ்க்கையை வெறுத்துத் தவவாழ்க்கையை மேற்கொண்டு சென்ற தனபதியும் அவன் தலைவியும் இருக்கும் இடம் யாருக்கும் தெரியாது. இன்று காலை வரை இந்நகரில் இல்லாத தனபதி இவ்வவைக்கு வந்தது மாயமேயாகும். ஆகையால் இவன் உண்மைத் தனபதியல்ல என்றனர். அவர் வார்த்தையைக் கேட்ட பொய்வேடங் கொண்ட புனிதர் விட்டேனு பாருங்கள்! என்னுடைமையைக் கவர்ந்ததுமன்றி என்னையும் பொய்யன் என்று உரைக்கின்றீர்கள். அவையோரே! நான் இந்நகரிலேயே வாழ்கிறன்வன். நான் இவர்களைமட்டுமன்றி இவர்களுடைய தாய், தந்தை, மாமன், மாமி, உடன் பிறந்தோர் முதலியோர்களையும் நன்கு அறிவேன்.

அவர்களின் பெயரும், பட்டமும் குடியும், குலமுந் தொழிலும், தகுதியும் எனக்கு நன்கு தெரியும் என்று கூறி அறிவித்தார். அமலன் உரைத்த குல முறையை அருகிலிருந்து கேட்ட வணிகனின் தாயத்தார்கள் அஞ்சி அறியாமல் ஆபத்தில் சிக்கிக்கொண்டோம். இதனை மன்னன் அறியின் என்ன கேடு விளையுமோ! என்று எண்ணி இல்லத்திற்குச் சென்றுவருகின்றோம் என்று சிலரும் குளத்திற்குச்சென்றுவருகின்றோம் என்று சிலரும் கூறி ஓடி மறைந்தனர். வேண்டுவார் வேண்டுவன ஈந்துவக்கும் வெள்ளியம்பலவாணர் வணிகச்சிறுவன் இழந்த வான்பொருளை அவனுக்கே அவையோர் முன் உரிமையாக்கி மறைந்தார். திருமணக்கோலத்தில் நின்ற சுந்தரரை சிறந்த நண்பனுக்கிக்கொள்ள விரும்பி விட்டேனு பாருன்னை! என்று வெண்ணெய் நல்லூர் அவையில் ஓலைகாட்டி வென்று ஆட்கொண்ட விகிர்தன், மாதர் இனத்தை மனத்தாலும் தீண்டேன் என்று விரதங்கொண்டு வாழ்ந்த நீலகண்டரை விட்டேனு பார்! என்று தில்லை அவையில் வென்று அவர் திருத்தொண்டின் சிறப்பை உலகறியச்செய்த தீரன் பிறன் பொருளைக் கவர்ந்த புல்லர்களை விட்டேனு பார்! என்று மதுரை அவை யில் வென்று விரட்டியது கூடற்கோமான் தன் அன்பர்களுக்கு மறுமையிலன்றி இம்மையிலும் நன்மை நல்கிக் காப்பேன் என்பதை உலகறியக்காட்டுவதற்கேயாம்.



# அருளைவேண்டிப் பொருளைப்பெருக.



**M. பரமசிவன்,** MA; L. LB.

நிர்வாக அதிகாரி, மதுரை வகையரு தேவஸ்தானம்.



கலையும் தொழிலும் தொடர்புடையவையானாலும் கலைவேறு தொழில் வேறு என்ற எண்ணம் நிலவி வருகின்றது. கலையில்லாத செயலே உலகில் இல்லை. இன்னும் குறிப்பிட்டால் வாழ்க்கையில் தொடர்புடைய செயல்கள் எல்லாவற்றிலும் மனிதனை மகிழ்விக்கும் பகுதியே கலையென உணரத்தக்கது. சாதாரண மண் பானையொன்றைக் குயவன் செய்து முடிப்பதைப் பார்ப்போர் ஓரளவு வியப்புணர்வு கொள்வது இயற்கை. ஆனால் அதே பானையில் தன் திறமையை வடித்தெடுக்க முற்பட்டு வெற்றியும் கொள்வானாகில் பானையின் அழகிய தோற்றத்தில் பரிமளிக்கும் குயவன் திறமையே கலை உணர்வாக எல்லோரையும் மகிழ்விக்கின்றது. அரிசியில் விநாயகர் உருவினை வடித்தெடுக்கும் திறமையும் கலை உணர்வின் இயக்கமென வியப்பதற்கேற்றதன்றோ.

ஆகவே தொழில் நுட்பம் கலை உணர்வு இரண்டும் இணைபிரியாதவை. உலகின் ஒவ்வொரு பகுதியிலும் தொழில் நுட்பமுள்ளோர் கொள்ளும் கலையுணர்வு உலகிற்கு அவர்கள் அளிக்கும் அன்பளிப்புகள் பலவற்றிற்குக் காரணமாகின்றது. மேலை நாடுகளைத் தொழில் நுட்பத்திற்கு உவமை கூறுவது உண்மையே, பற்பல தொழில்கள் அங்கு வியக்கும் படியாக உயர்ந்துள்ளன. அவையெல்லாம் தமிழ் நாட்டின் கோபுர உயர்வுக்குத் தாழ்ந்தவை என்பதை இங்கு தொழிற் கண்கொண்டு கூறுவதோடு கலைக்கண்கொண்டும் கூறத்துணியலாம்.

ஆலயங்கள் தொழில் நுட்பம், கலை உணர்வு, ஆகியவற்றின் சின்னங்கள். தமிழ் மக்களின் வாழ்க்கை வளர்ச்சியின் சின்னமென்றும் கூறலாம். தமிழ் மக்கள் வாழ்க்கை முறையே ஆலயங்களைப் பெருக்கி அமைப்பதில் வளர்ந்ததெனலாம். வேறு நாடுகள் இம்முறைக்கு இணை நில்லாதவை. நாட்டு மக்களின் வாழ்க்கை வளர்ச்சியைப் பல நிலைகளிலிருந்து பார்க்கிற வழக்கப்படி பொருள் கொண்டு பார்ப்பின் தமிழ்நாடு இப்போது சிறிது பின் தங்கியிருப்பினும் முன்னைய நிலை இயற்கை வளம் கொண்டு பிற நாடுகளைவிட மேம்பட்டிருந்தது என்பதே சரித்திரத் துணிவு. அருள்கொண்டு பார்ப்பது தமிழ் நாடு ஒன்றிற்கே உரியமுறை. ஆலயப் பெருக்கிற்குக் காரணம் கூறும் பொருட்டு நாட்டின்

வளர்ச்சியை அருள்கொண்டு காணும் தமிழ் மக்களின் தனிச் சிறப்பு முறையை இங்கு குறிப்பிடலாயிற்று.

அருள் எண்ணம் உலகிற்கே கற்பித்தது தமிழ் நாடு. அதிலும் அருள் வளர்ச்சிக்கே வாழ்வு என்றும் உலகிற்கு ஓதுவது தமிழ்நாடு. ஆலயங்களைக் கட்டுவதென்ற உள்ள நெகிழ்ச்சி தொழில் துறையாகக் கருதிய எண்ணம் கொண்டன்று என்பது இங்கு தெளிவாக்கப்பெறுகிறது. பின்பு எங்ஙனம் என்பதே ஒரு தனி ஆராய்ச்சிக்கு உரியது.

ஒரு தொழிலில் ஈடுபடுவோர் தொழில் முடிந்ததும் தம்மை அத்தொழி லிலிருந்து வேறுபடுத்திக்கொள்ளுவதே இயல்பு. தொழிலின் பலனுக்கும் தொழில் வல்லுனருக்கும் ஒருமைப்பாடில்லை. ஆலயம் ஆக்கியோரிடம் ஆலய உருவகமே ஒன்றியிருப்பது நுட்பம் மட்டும் அன்று; பிற நாட்டை வேறுபடுத் தும் கலையுமாகும். இன்னும் விளக்கினால் ஆலயம் ஆக்கியோர் தம்மையே ஆலயத்தோடும் ஆலயப் பயனோடும் ஒன்று படுத்தினர் என்பதே இங்கு குறிப் பிடும் சிறப்பு. தமிழ் நாடு உள்ளளவும் ஆலயம் உண்டு. ஆலயம் உள்ளளவும் தமிழ் மக்கள் சிறப்புண்டு.

தமிழ் மக்கட் சிறப்புப் பாதுகாக்கப்பெற ஆலயங்கள் அந்நாளிலிருந்தே தனித்தனி ஸ்தாபனங்களாகவும் இயங்கி வருகின்றன. வாழ்க்கை வசதிகள் ஸ்தாபனங்கள் மூலமே கைகூடுமென்போருக்கும் ஆலயங்களினால் பெறும் வாழ்க்கை வசதிகள் யாவையெனவும் கூற இயலும். பொருளும் அருளும் வலியுறுத்தப் பெறுவது தமிழ் நாட்டில் தான் என்பதை மேலே கூறியுள்ளோம். பொருளோடு அருளும் இணைந்து காண விழைவது தமிழ்ப்பண்பு. அருள் யாது?

"அருளொடும் அன்பொடும் வாராப் பொருளாக்கம்
புல்லார் புரளவிடல்."

என்ற வள்ளுவர் வாக்கிலும் பொருளை அருளோடு பெறவே பணித்தார்.

ஆலயங்களில் பணிபுரிவோர் ஆலயங்கள் உணர்த்தும் பண்புகளை வளர்க் கவே பணிபுரிகின்றனர். அவ்விதப் பண்பாடுகள் யாவையென்றால் வள்ளுவர் கூறும் அருளும் அன்பும் ஆகுமெனலாம். அருளிலும் அன்பிலும் துலங்கும் வல்லவரே திருப்பணி புரிவோர் ஆகின்றனர். அவர்கள் பெறும் பயன் பேற்றுப் பயன். அபிராமியின் இணையடிகள் சேரும்படி பறையறிவிக்கும். அபிராமிப் பட்டரும் இல்லை என்று கூறி மனமுடைந்து ஒருவரிடம் கை கட்டி நிற்பதைவிட அபிராமியின் இணையடிகள் சேர்வோருக்கு இல்லையென்பதே இல்லாது ஒழியும் என்றார். மேலும் உலகில் எல்லோரும் கற்றவரே, தவம் கல்லா தவரே கல்லாத வர், அவரும் தவம் கல்லாமை கற்ற கயவர் என்று அபிராமிப்பட்டர் நகைச்

சுவையுடன் கூறுவதிலிருந்து அருள் வேண்டிப் பணி செய்தால் பொருள் தானே வந்து சேரும் என்பது தெளிவு.

" இல்லாமை சொல்லி ஒருவர்தம்பால் சென்று இழிவு பட்டு
நில்லாமை நெஞ்சில் நினைகுவரேல் நித்தம் நீடுதவம்
கல்லாமை கற்ற கயவர்தம்பால் ஒரு காலத்திலும்
நில்லாமை வைத்த திரிபுரை பாதங்கள் சேர்மின்களே."

என்று அபிராமிப்பட்டர் தமிழ் மக்களை ஆற்றுப் படுத்தும் அழகே அழகு.

ஆலயங்களில் அரசன் முதல் சாதாரண மக்கள் ஈராக எல்லோரும் பணிபுரிந்தனர். அருளையும் பொருளையும் பெறும் பொருட்டேதான். பொருள் பெற்றோர்தம்மை அதிபதிகள் என்றும் ஈஸ்வரன் என்றும் கூறிக்கொள்ளும் தவறான வழக்கு தமிழ் நாட்டில் இருந்து வருகிறது. லக்ஷம் பொன் பெற்றோர் லக்ஷாதிபதி என்றும் கோடி பொன் பெற்றோர் கோடீஸ்வரன் என்றும் பெருமிதம் கொள்வதுண்டு. தமிழ் நாட்டில் ஒரு பழமொழி ஏற்படுமாயின் அது இவ்வளவு சுலபமான பொருளில் ஏற்பட்டிராது என்று துணிந்து கூறலாம். லக்ஷத்தில் ஒருவர் தான் அதிபதி என்ற கௌரவம் அடைய முடியும், கோடியில் ஒருவர்தான் ஈஸ்வர அம்சம் எய்துவது இயல்பு என்ற அருமையான பொருளில் ஏற்பட்ட பழமொழிகள் காலத்தால் திரிந்து பொருள்படுகின்றன போலும். ஆகவே காலமும் ஒருவனை அதிபதியாக்க இயலும், ஈஸ்வரனாக்க இயலும் என்ற சூழ்நிலைகள் உண்டு. இறைபணியிலும் அன்பு நெறியிலும் மேம்பட்டு விளங்கும் மக்களுள் லக்ஷத்தில் ஒருவர் அதிபதியாவதும், கோடியில் ஒருவர் ஈஸ்வரன் ஆவதும் இயல்பு என்றால் இவ்வித வாய்ப்பையும் அடைவதற்கு அவன் அருள் வேண்டும் என்று அவனையே சார்ந்திருப்பதுதான் தமிழ் மரபு. இம்மரபிற்கே அபிராமிப்பட்டர் ஆற்றுப்படுத்தினார். திருவாசகத் தேன்தந்த மணிவாசகரும் ஆற்றுப்படுத்துகிறார்.

" கால முண்டாகவே காதல் செய்து உய்மின் கருதரிய
ஞால முண்டானொடு நன்முகன் வானவர் நண்ணரிய
ஆலமுண்டான் எங்கள் பாண்டிப்பிரான், தன் அடியவர்க்கு
மூல பண்டாரம் வழங்கு கின்றான் வந்து முந்துமினே"

இறைவனை மூல பண்டாரம் என்கிறார் மணிவாசகர். பண்டாரம் என்றால் பொக்கிஷம் என்பர். சகல செல்வமும் நிறைந்த இடம். இறைவனைச் "சென்றடையாத திருவுடையான்" என்றார் சம்பந்தர். இறைவனிடம் இவ்வாறு ஒரு பொருள் அவனை வந்தடைந்தது என்று கூறலரிது. எல்லாச் செல்வமும் கொண்ட பண்டாரம். ஆகவே அவனை மூல பண்டாரம் என்றலும் தகும்.

அவன் தன்னிடம் உள்ள செல்வங்களை வாரி வாரி இறைக்கின்றான். இறைவன் எனவும் அழைக்கப்பெறுகிறான். பெறவிருப்ப முள்ளோர் வந்து பெற்றுக் கொள்ளுங்கள் என்று பறையறிவிக்கின்றார் மணிவாசகர்.

மூல பண்டாரத்தைக்கொண்டோம் என்றே தமிழ் மன்னர்கள் முரசு கொட்டினர். நாடெல்லாம் ஆலயம், விதவிதமான ஆலயம், தம்மை அலங்கரிப்பது போலவே மூல பண்டாரத்தையும் அலங்கரித்தனர். தமது வாழ் நாள் போதவில்லையே என்றும் வருந்தினர். தன் தந்தைக்கு அறுபது ஆண்டு நிறைவு விழாக்கொண்டாடும் ஒருவன் மூலபண்டாரமான இறைவனுக்கு எத்தனை அறுபதுகள் கொண்டாட வேண்டும்! சைவக் குரவர்களில் ஒருவரான நாவுக்கரசரும் கூடத் தான்பெற்ற இறையருளைக்கொண்டு தந்தை நாயகமான இறைவனைப் பாடிப்பாடி பணிபுரிய தன் வாழ்நாள் போதவில்லையேயென வருந்தினார். இளமை முதுமைப் பருவங்களில் இறைவனை வழிபடும் குறிக்கோளில்லாமல் வாழ்ந்ததாய் வருந்தும் நாவுக்கரசர் தனது பின்முதுமையில் அருள் நெறியை அன்புடன் கலந்து பரப்பினார். மூல பண்டாரப் பேற்றினையும் உணர்ந்தார். அவர் திருவாக்கினையும் இங்கே நோக்குதல் நன்று.

"பாலனாய் கழிந்தநாளும் பனிமலர்க் கோதைமார் தம்
மேலனாய்க் கழிந்த நாளும் மெலிவொடு மூப்புவந்து
கோலனாய்க் கழிந்த நாளும் குறிக்கோளிலாது கெட்டேன்
சேலுலாம் பழனவேலித் திருக்கொண்டீ சரத்துளானே"

நாவுக்கரசர் பல்லவப் பேரரசன் மகேந்திரவர்மன் காலத்தில் மன்னனையும் சைவத்தில் திளைக்கச் செய்து மக்களையும் சைவத்தைப் போற்றும்படி சைவ நெறி பரப்பிவந்தார். ஆனால் மகேந்திரவர்மனைப்பற்றிய சொல் ஒன்றும் அவரது பாடல்களில் நேர் பொருளில் வைக்காது பாடியதிலிருந்து மன்னன் மீது மதிப்பில்லையென்றாகாது. யாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம் என்று பாடியது ஒரு சமயம். ஆனால் ஆலயங்கள் தோறும் இறைவழிபாடு செய்யும் போது ஆலயங்களை ஆக்கிய முந்திய மன்னரையும் மக்களுக்கு ஞாபகமூட்டியே பாடியும் வைத்தார். அவரது பாடலிலிருந்து தெரியவரும் அரிய குறிப்புகள் சிலவற்றை இங்கு குறிப்பிடுதல் அருளை நாடிய மன்னருக்குச் செய்யும் அஞ்சலியுமாகும்.

சோழன் செங்கணன் எழுபத்தியெட்டு ஆலயங்களைக் கட்டுவித்தான். அவற்றில் எழுபது சிவாலயங்கள் என்றும் எட்டு வைணவ ஆலயங்கள் என்றும் சொல்வதுண்டு. எழுபத்திஎட்டும் சிவாலயங்களே என்று சொல்வாருமுண்டு

"பெருக்காறு சடைக்கணிந்த பெருமான் சேரும்
பெருங்கோவில் எழுபதினோ டெட்டும் மற்றும்,"

என்ற நாவுக்கரசர் பாடலின் முதல் இரண்டு அடிகளிலிருந்து எழுபத்தி எட்டு ஆலயங்கள் என்பது தெளிவு. திருமங்கை மன்னர் தனது திருமொழியில்

"இருக்கிலங்கு திருமொழிவாய் எண்டோளிசற்கு
எழில் மாடம் எழுபது செய்து உலகமாண்ட
திருக்குலத்து வளச் சோழன்......"

என்று கூறுமாற்ருன் சிவாலயம் எழுபது என்றும் அல்லது சிவபெருமானுக்கும் திருமாலுக்கும் எழுபது கோவில்களுக்குமேல் கட்டிப் பெருமை பெற்ருன் செங்கட்சோழன் என்ருகிறது. செங்கணன் கட்டிய கோயில்களில் திருஆனைக்காவும் ஒன்று.

"செம்பியன் கோச் செங்கணன் சேர்ந்த கோவில்
திரு நறையூர் மணிமாடம் சேர்மின்களே,"

என்ற திருமங்கை மன்னன் வாக்குப்படியும் திருநறையூர் (இப்போது நாச்சியார் கோயில் என்பாரும் உளர்) மாடக்கோவிலும் செங்கணன் செய்ததேயாகும்.

நாவுக்கரசர் பாடலில் ஆலயவகைகளும் கூறப்படுகின்றன. மருளைப் போக்கி அருளைப்பெற இறைவனுக்கு உருவாக்கிய ஆலயங்களின் வகைகளே கட்டிடக்கலையின் ஆராய்ச்சிக்கு விருந்தாக விளங்கும்.

"பெருக்காறு சடைக்கணிந்த பெருமான் சேரும்
பெருங்கோயில் எழுபதினோ டெட்டும் மற்றும்
கரக்கோயில் கடி பொழில்சூழ் ஞாழற் கோயில்
கருப்பறில் பொருப்பனைய கொகுடிக் கோயில்
இருக்கோதி மறையவர்கள் வழிபட்டேத்தும்
இளங்கோயில் மணிக்கோயில் ஆலக்கோயில்
திருக்கோயில் சிவனுறையும் கோயில் சூழ்ந்து
தாழ்ந்திறைஞ்சத் தீவினைகள் தீருமன்றே."

என்ற பாடலில் கரக்கோவில், ஞாழற்கோவில், கொகுடிக்கோவில், இளங்கோவில், மணிக்கோவில், ஆலக்கோவில் என்று ஆறுவகையான கோவில்களைச் சென்று வணங்க மருள் நீங்கும் என்ருர்.

சிற்ப நூல்கள் விஜயம், ஸ்ரீபோகம், ஸ்ரீ விலாசம், ஸ்கந்த காந்தம், ஸ்ரீகரம், ஹஸ்தி பிருஷ்டம், கேசரம் என்ற ஏழுவகையான கோவில்களைக் கூறுகின்றன. ஆகமத்தில் இவை கூறப்படுவதாய்ச் சொல்லப்படுகின்றன. வடமொழிச் சொற்களால் கூறப்படும் கோவில்கள் தமிழ்ச்சொல்கொண்டு சுட்டிக் காட்ட இயலாதவாறு உள்ளன. ஆனல் இரண்டும் ஒரு பொருளில் விளங்குபவையே.

கோவில்கள் வெவ்வேறு பெயர்கள் பெறுவது அவற்றின் விமான அமைப்பைக்கொண்டேயாகும். கரக்கோவில்கள் வட்டவிமானமுடையவை. திருக்கடம்பூர் ஆலயம் இதற்கு உவமையாகும். ஞாழற்கோவில் அமைப்பு இப்போது தெரிவதற்கில்லை. ஆனால் ஞாழம் என்றால் குங்கும மரத்தைக் குறிக்கும். கொகுடிக்கோவில்கள் வட்டமான விமானத்தில் கர்ண கூடங்களைக் கொண்டவையாய் இருக்கலாம் என்கின்றனர். "கருப்பறியல்" ஆலயம் இவ்வகையென்பது பாடலிலிருந்தே தெரிகிறது. இளங்கோவில் என்பது நான்கு பட்டை விமானம் கொண்ட கோவில் என்பர். மீயச்சூர் (பேரளம்) ஆலயம் இளங்கோவில் வகையென அப்பர் தேவாரம் கூறும். மணிக்கோவில்களின் அமைப்பும் தெளிவாகத் தெரியவில்லை. ஆறுபட்டை, எட்டுப்பட்டை விமானக்கோவில்களாயிருக்கலாம் என்று யூகிக்கப்படுகிறது. ஆலக்கோவில் என்பது ஆனைக்கோவில் என்பதன் திரிபு என்பர். கஜபிருஷ்ட விமானங் கொண்டவை என்பர். யானையின் முதுகுபோன்ற கூரையையுடைய ஆலயங்கள் ஆலக்கோவில்கள் எனப்பெறுகின்றன.

மூலபண்டாரத்திற்கு மூல சாத்திரங்களில் சொல்லப்பெறுவது போல ஆலயங்களை தமிழ் மன்னர்கள் கட்டினர். அவற்றைப் பாதுகாக்கும் பணியே திருப்பணியாகும். ஆலயங்களில் உள்ளடங்கியவை சிற்பங்கள். திருப்பணியில் அதிகக்கவனம் பெறுபவை சிற்பங்களும் திருக்கோவிலினைப் புதுப்பித்தலுமாகும். ஆனால் மூல சாத்திரங்களில் வரையறுக்கப்பட்டு தமிழ்ப் பெருங்குடியினரால் தோற்றுவிக்கப்பெற்ற ஆலய அமைப்பையோ, சிற்ப தெளிவையை இக்காலத்தில் மாற்ற இயலாது. மாற்றவும் கூடாது. பாதுகாப்பு முறைகள் பலவாயிருக்கலாம். ஆனால் அவற்றினால் திரிபுகள் வரவேற்கத்தகுந்ததன்று வழிபடு முறைகளும் காலத்தால் மாறலாம். ஆனால் கொள்கையில் திரிபுகளைப் புகுத்துவதும் வரவேற்கத்தகுந்ததன்று. சைவ, வைணவ விதிமுறைகள் கட்டுப் கோப்புகள் நிறைந்தவையாக இருக்கலாம். ஆனால் வழிபடுவோரின் மனப்பண்பாடுதான் அவற்றிற்குக் காரணம். பண்பட்டமனம் அருளைப்பற்றுகிறது. அதுவே பொருளும் ஆகிறது. "சொல்லிய சொல்லின் பொருள்" என்ற மாணிக்கவாசகரின் பொருள் இறைவனே, இறைவன் அருளே என்று விளக்கவும் வேண்டுமோ?

இறைபணி என்பது நாட்டின் அருளைக்காப்பது. தெரிந்தும் தெரியாமலும், அறிந்தும் அறியாமலும், நேராகவும் மறைமுகமாகவும் இறைபணியில் தவறுகள் இழைப்பதுண்டு. பணியாளர்கள் தவறு காணும்போது பண்பிற்கு மேன்மைகொடுத்து திருத்துவதும் நற்பணியாகும். அருளும் பொருளும் ஆன்றமைந்த ஆலயங்களில் எல்லோருக்கும் பொறுப்புண்டு. அருளிலும் பொருளிலும் பின்னம் கண்டால் பொறுப்பினர் யாவராயினும் பெரியார்ப் பிழைத்தொழுகுவார் என்றல் வேண்டும். மன்னர்கள் கண் போலும் காத்த

பண்பை மண்போலும் தள்ளுதல் இழுக்கு. பல துறைகளிலும் அருள் புகுந்தால் பொருள் தானே வந்தெய்தும். "இறைவனும் மலர்மிசை ஏகினன்" என்றுதான் வள்ளுவர் உணர்த்துகிறார்.

அருளைவேண்டிப் பொருளைப் பெறுக என்றுதான் சைவம் உணர்த்தும். சைவக் குரவர்களும் உணர்த்தினர்.

"மண்ணில் நல்லவண்ணம் வாழலாம் வைகலும்
எண்ணில் நல்லகதிக்கு யாதுமோர் குறைவிலை
கண்ணில் நல்லஃதுறும் கழுமல வளநகர்
பெண்ணில் நல்லாளொடும் பெருந்தகை இருந்ததே!"

என்ற சம்பந்தர் வாக்கும் சிந்தனைக்கு வருகிறது. பெண்ணில் நல்லாளொடு பெருந்தகை இருந்ததை எண்ணில், நல்ல கதிக்கு யாதுமோர் குறைவிலை; மண்ணில் நல்ல வண்ணம் வைகலும் வாழலாம் என்றல்லவோ சம்பந்தர் நம்மையெல்லாம் வாழ்த்துகின்றார்.

கண்ணனைக் காணவேண்டுமென்றுதான் போனார் குசேலர். அருளொடும் அன்பொடும் பொருளைப் பெற்று பேறும் பெற்றார். அப்பரும் சம்பந்தரும் பொற்காசுகள் பெற்றும் தம் குழுவினருக்கும் அடியார்களுக்கும் உணவளித்தனர். ஆண்டவனிடத்தில் உண்மை அன்பே அவனது அருளைக்கொணர வல்லது என்பதற்குச் சான்றுகள் ஏராளம். அருளோடு வருவது பொருள். உலகியற் பொருள் வேண்டினும் கொள்க. பேரின்பப் பொருள் வேண்டினும் கொள்க. இறைவனே அப்பொருள். அருளை வேண்டிப் பொருளைப் பெறுக.



# இசை மறையோன்

லெ. இராமநாதன் M. A;
தமிழ் விரிவுரையாளர், அரசர் துரைச்சிங்கம் நினைவுக்கல்லூரி,
சிவகங்கை.

விருப்பு, வெறுப்பில்லா இறைவன் அருவாயும், உருவாயும், எங்கும் பரவி யிருக்கிறான். இவ்வுலகில் அவனன்றி ஒரு அணுவும் அசையாது. ஆட்டுவித்தால் ஆடாதார்யாருளர். அவனை அடையப் பாடுபட்ட அடியவர்களைக் காண்கிறோம். இறைவனைத் தாயாகவும், தந்தையாகவும் ,மாமனாகவும், மாமியாகவும் கொண்டு, தன் உள்ளத்தைப் பறிகொடுத்த நேயத்தை அறிகிறோம். தேவாரத்தில், ஒரு அடியார்.

"அப்பன் நீ அம்மை நீ ஐயனும் நீ
அன்புடைய மாமனும் மாமியும் நீ
ஒப்புடைய மாதரும் ஒண் பொருளும் நீ"

என்று வாயாரப் புகழ்ந்து, நைந்து உருகுகிறார். இறைவனே எல்லாம். குலமும், சுற்றமும், பொருளும், வாழ்வும் அவனால் விளைவதுவே. இதை தேவாரத்தில்

"ஒருகுலமும் சுற்றமும் ஓரூரும் நீ
துய்ப்பனவும் உய்ப்பனவுந் தோற்றுவாய் நீ
துணையாய் என் நெஞ்சந் துறப்பிப்பாய் நீ
இப்பொன் நீ இம்மணி நீ இம் முத்தும் நீ"

என்று கூறுகிறார், செல்வம் புகழ் எல்லாம் இறைவன் தருவது. மக்களின் மனத்தை இறைவன் நன்கு அறிவான். சூது, வாது, வஞ்சனை பொய், இவைகளைத் தன்னகத்தே கொண்டு, மக்கள் பொய்யாக இறைவனைத் தொழ முற்படுவார்களேயானால், அவர்களைப் புரிந்துகொண்டு, தக்க தண்டனை நல்க, இறைவன் தவறுவதில்லை. இறைவன், வேண்டுதல் வேண்டாமை யில்லாதவன் என்பதை வள்ளுவர்

"வேண்டுதல் வேண்டாமை இலான் அடி சேர்ந்தார்க்கு
யாண்டும் இடும்பை இல"

என்று கூறுகிறார். கடவுளின் திருவடிகளைத் தூய உள்ளத்தோடு எவனொருவன், மனத்திலே பொருந்த நினைக்கின்றானோ, அவனுக்கு எப்போதும், எவ்விடத்தும்

துன்பம் இல்லை. அவன், எத்தகைய இடரையும் தாங்கும் வல்லமை பெற்றவனுவான். காரணம் இறைத்தன்மை அவனிடம் பொருந்தியிருப்பது தான். ஆசையை வென்று, தன் புலன்களை அடக்கி, நெறி நின்று செம்மைபுரி சிந்தையராய் வாழ முற்படுபவர்களை இறைவன் ஒருநாளும் கைவிடுவதில்லை. அவர்களை இவ்வுலகில் நெடிது வாழச் செய்கிருன் என்பதை வள்ளுவர்

"பொறி வாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறி நின்ருர் நீடு வாழ்வார்"

என்று எடுத்துக் கூறுவாராயினுர்.

இத்தகைய இறைவன் ஒவ்வொரு இடத்திலும் அன்பும் அருளும், பண்பும் பரிவும் உடையவனுகக் காட்சி தருகிருன். அவன் உறைந்திருக்கும் ஆலயங்களுக்குச் சென்று, அவனைக் காணவேண்டுமென்று தலயாத்திரை செய்த பெருமக்களையும் காண்கிருேம். இறைவன் ஒருவன்தானே அவனுக்கு உருவமில்லையே அப்படியிருக்க ஏன் அவனைக்காணச் செல்லவேண்டும் என்று பலர் ஐயுறுகிருர்கள். இறைவன், யார் யார் எப்படி எப்படி விரும்புகிருர்களோ அவர்களுக்கு ஏற்ப, அவர்கள் மனம் அமைதியடையும் வகையிலே பல திரு உருவங்களாக அமர்ந்து, தன்னைக் காணவருபவர்களுக்கு அமைதியைக் கொடுக்கிருன். ஆலய வழிபாடு அமைதிக்கு அடிப்படை. இவ்வுலகில் பிறந்த எல்லோரும் மனிதர்கள் தான். ஆனுல் எல்லோரும் ஒரேமாதிரியான, உணவு, உடை, சுவை இவைகளை விரும்புவதில்லை. அதேபோல, உலக மக்களுக்குத் தந்தையாகவும், தாயாகவும் உள்ள இறைவன், அனைத்துக்குழந்தைகளின் விருப்பிற்கேற்ப பல உருவங்களிலே தங்கி உள்ளான். அவனது திரு உருவத்தைக் காண, நாவுக்கரசர், ஞானசம்பந்தர், மாணிக்கவாசகர், போன்ற சமயக்காவலர். கள், தங்கள் கால்களினுலே நடந்து, நீண்டதூரம் சென்று பல பதிகளையும் தொழுது பேறு பெற்றுள்ளார்கள். ஐம்பொறிகளை இறைவன் ஏன் கொடுத்துள்ளான் என்பதற்கேற்ப, அதனது பயனை நுகர்வான்வேண்டி கால்களால் நடந்து தங்கள் ஆசைகளை முற்றுவித்துக்கொண்டுள்ளார்கள்.

நாவுக்கரசர், தேவாரத்தில்

"கால்களாற் பயன் என், கறைக்கண்டன் உறை
கோவில், கோலக், கோபுரக் கோகரணஞ்
சூழாக் கால்களாற் பயன் என்"

என்று கூறுகிருர். கால்களை அடைந்தபயன் ஆலயத்திற்குச் செல்வது என்பது அதை நாவுக்கரசர் போன்றவர்கள் முற்றுவித்துக்கொண்டுள்ளார்கள் என்பதால் அறிகிருேம்.

இறைவன் ஒவ்வொரு தலத்திலும் காட்சிக்கு எளியனுய் அமர்ந்து, கருணைபுரிகிருன் என்பதைச் சேக்கிழார் பெருமான் தன் காப்பியமாகிய பெரிய புராணத்திலே கூறுகின்றபோது, திருவாரூரில் இறைவன் எழுந்தருளியிருக்கும் திறம்

"நீள் சுடர் மாமணிப் புற்று கந்தார்"

என்று கூறுகிருர். நிலவு மணிப் புற்றிடங்கொள் நித்தர் தம்மைக் கூடிய அன்பொடு, காலங்களில் சென்று அணைந்து கும்பிட்டு நெறி நின்ருர், நாவுக்கரசர் என்று கூறும் சிறப்பு இறைவனின் மாரு அன்பை எடுத்துக்காட்டுவதாகும். திருவலிவலத்தில், இறைவனின் தோற்றம் "வாராரு நகில் மங்கை உமைபங்கராய்" அமர்ந்திருக்கிருர், என்று காட்சியை ஓர் ஓவியம் போல் தீட்டிக் காண்பிக்கிருர்.

மற்றுமொரு நிகழ்ச்சியை "நீராருஞ் சடைமுடியார்" என்றும், திருக்கீழ் வேளூர், கன்ருப்பூர் முதலிய தலங்களிலே "காராரும் கறை கண்டராக" அமர்ந்து காட்சி தருகிருர் என்றும், "கார் மன்னுங் கறை கண்டர்" என்றும் "வார்ந்தாடும் சடையார் தம் பதி பலவும் வணங்கி" நாவுக்கரசர் மனம் மகிழ்வுற்ருர் என்றும் சேக்கிழார் கூறும் சிறப்பு அடியவர்களது நேயத்தை எடுத்துக் காட்டுவதாகின்றது.

திருவீழிமிழலையில் "முக்கட் செக்கர்ச்சடை மவுலி, வென்றி விடையார் சேவடி" யுடன் காட்சி தருவதாகக் கூறுகிருர். இத் தோற்ற மெல்லாம், பக்தர்களுக்கு இறைவன் அளித்த அருட் காட்சி, அத்தகைய அருளைப் பல்வேறு நிலைகளிலே கண்டு, விருப்பிற்கேற்பப் பெறுகிருர்கள், ஒவ்வொரு ஆலயத்திலும் இறைவன், ஆன்மாக்களின் பொருட்டு உருவத்துடன் அமர்ந்து, ஆணும், பெண்ணுமாய்க் காட்சி தருகிருன். இவைகள் ஆலயங்களிலே இல்லையென்ருல் உலகமக்கள் நன்னெறியில் செல்ல முடியாது. தங்கள் தங்கள் போக்கிற்கேற்ப வழி நடத்துபவர் யாருமில்லாது, வாழ்க்கையிலே தவறித் துன்பப்படுவர். ஆகவே தான் கோவிலுக்குச் சென்று, உள்ளத்தாமரையில் இறைவனை வைத்து வணங்குபவர்கள், இவ்வுலகில் நீடு வாழ்வார் என்று கூறப்படுகிறது.

இறைவன் ஒருவள்ளல். கைம்மாறு கருதாது கொடுக்கும் வள்ளல், யார் எதை விரும்புகிருர்களோ, அதை நல்கும் வள்ளலாவார். உலகில் வள்ளல் தன்மையுடையவர்கள் எத்தனையோ பேர் உண்டு. பாரிவள்ளல், கடையேழு வள்ளல்கள், கொடைக்கு கர்ணன் போன்றவர்கள் வாழ்ந்து, வள்ளல்களாக மறைந்துள்ளார்கள். ஆனுல் இவர்கள் வறுமையை அகற்றப் பொருள் கொடுத்த வள்ளல்கள். இவர்களது பூத உடல் அழிந்தும் புகழ் உடம்பு நிலவி நிற்கின்றது. இறைவனே அருட் செல்வத்தைக் கொடுக்கும் வள்ளல் இதைப்பிற்காலத்துப்

புலவர் "வள்ளல் இணையடிக்கு வாய்த்த மலர் எதுவோ" என்று கூறிச் சிறப்பிக்கிருர்.

இறைவன் தன் அன்பர்களுக்கு அன்பனுக உள்ளான் என்பதையும் காண்கிருேம். விடாது பற்றுக்கொண்டு அவனது நிலையையே எண்ணியிருப்போருக்கு இறைவன் நல்கும் மாண்பிலிருந்து சிறிதும் வழுவுவதில்லை. ஒரு சமயம் செருக்குற்ற ஏமநாதனை அடக்கவேண்டி இசைவல்லனுய் விறகு சுமந்து வந்த நிகழ்ச்சியையும் திருவிளையாடற் புராணத்திலிருந்து அறிகிருேம். பாணபத்திரன் என்பவன் வரகுண பாண்டியனிடம் அவைக்களப் புலவனுய் இறைவனிடத்தில் அன்பு பூண்டவனுய் தன் வாழ்வை நடாத்திக்கொண்டிருந்தான். வடபுலமிருந்து வந்த ஏமநாதன், சிறந்த யாழ்வல்லவனுயினும், செருக்கால் தன் நிலை இழந்தான். பாண்டியன், பாணபத்திரனை ஏமநாதனேடு போட்டியிட வேண்டுமென கட்டளையிட, பாணபத்திரரும் வருந்தி அவனை வெல்வது எவ்வாறு என்று, இறைவனிடம் சென்று இரங்கி வேண்ட, அன்பர்களை ஆதரிக்கும் வல்லோன், பாணபத்திரரை ஆட்கொள்ளவேண்டி, அருட்கருணை நல்க வேண்டி, ஒரு நாள் விறகு ஆளாய் வந்து ஏமநாதனது செருக்கை அடக்கி, அவனை ஓடும்படி செய்தார் என்பதை நமக்குத் திருவிளையாடற் புராணம் காட்டுவதாகின்றது. நாரைக்கு முக்திகொடுத்ததையும் அறிவோம். நடுவுநிலைமையுடன் உயிரினங்களுக்குக் கருணை நல்கிய இறைவனின் மாண்பை எடுத்துரைப்பது முடியாத செயலாகும். இருப்பினும் வேதங்களைக் கடந்த முடியையுடைய சிவபெருமானின் செயலை நாம் காண்கின்ற நிலையில், எப்படி உலகத்தோடு தொடர்புடையதாகிறது என்பதை அறிந்துகொள்ளுகிருேம்.

இசை வல்லானை வென்றடக்க இசைவல்லானுகவே இறைவன் வருகிருன். யாழிலே சாதாரி என்ற பண்ணை இசைக்கிருன். அதைக்கேட்டு உலகம் ஆடுகிறது என்றும், இயங்கும் பொருளும், இயங்காப்பொருள்களும் அசைகின்றன என்றும் அனைவரும் பரவசமடைய இசை மயக்கியது என்றும் கூறுகிருர். அதோடு அமையாது பகையை மாற்றியது என்று வர்ணித்துக் காட்டுகிருர். இசைக்கு மயங்காதோர் இவ்வுலகில் யாரும் இல்லை. இறைவனுல் பாடப்பட்ட பண்ணைக்கேட்டு உலகமே இசையாகிய கடலில் மூழ்கியது என்று கூறும் சிறப்பு போற்றுதற்குரியது.

"பழைய தோர் பொல்லம் பொத்திய பத்தர்யாழ்க்கோர்
தோள் உழையது ஆக விட்டு"

இசையில் வல்ல, யாழ்ப்பாணர்கள் வருவதுபோல வருகின்ருன். யாரும் ஐயப்படா வண்ணம் இயல்பாகத் தன்யாழை இடப்பக்கம் தழுவி நரம்பை எறிந்து பண்ணை எழுப்புகிருர், அவ்விசைத்தேன்

"அண்டவானர்தஞ் செவிக்கால் ஓடி,
மயிர்த்துளை வழியத் தேக்கி,
அமுத யாக்கை இசை மயமாக்கியது"

இது உயர்திணையாகிய தேவர்களின் நிலை ஆனால் அஃறிணைப் பொருள்களும் தன் நிலையில் திரிந்தன என்று கூறும் சிறப்பு உள்ளத்தைப் பிணிப்பதாகும். அவ் விசைத்தேனை தேவர்கள் மட்டும் உட்கொள்ளவில்லை. அதைக்கேட்டு.

"தருக்களுஞ் சலியா, முந்நீர்ச் சலதியுங் கலியா,
மருள் ஓட அறிவன் தீட்டி வைத்த
சித்திர மே யொத்த"

என்று கூறி மரம், மலை, நதி இவைகளும் இசையில் மயங்கி, சித்திரத்தில் எழுதியதுபோல அப்படியே ஈடுபட்டிருந்தது என்று கூறுகிறார். செவியுள்ள வர்கள் இசையை அனுபவிப்பது இயல்பு. செவியின்றி ஓரே தன்மையான வடிவம் கொண்டுள்ள மலை, மரம் இசை கேட்டு மதிமயங்கின என்று கூறுவதி லிருந்து இறைவனது ஆற்றலும், இறைவன் உயிர்களிடத்தில் கொண்டுள்ள தொடர்பும் வெளிப்படுவதாகின்றது. பகையைக் கூட மாற்றும் இயல்பினன் இறைவன். உலகில் ஒன்றுக்கொன்று பகைமைகொண்டுள்ளன. இறைவனின் இசையோ, அவைகளின் நிலையை மாற்றி நட்புக்கொள்ளச்செய்கிறது என்பதை:

"பைத்தலை விடவாய் நாகம் பல் பொறி மஞ்ஞை
நால்வாய் மத்தமான் அரிமான் புல் வாய்
வல்லிய மருட்கை யெய்திற் தத்தம் மாறு
அறியா வாகித் தலைத்தலை மயங்கிச் சோர
இத்தகை மாவும் புள்ளும் இசைவலைப் பட்ட வம்மா"

என்றும், ஓரறிவுடைய மரங்களெல்லாஞ் செவியறிவுடைய வாகி, மெல்லிய தளிரினை ஈன்று பூக்கள் விரிந்து கண்ணீரும் பொழிந்தன என்பதை

"வன் தரை கிழிய வீழ்போய்
வான் சினை கரிந்து நின்ற
ஒன்றறி மரங்க ளெல்லாஞ்
செவி யறிவுடைய வாகி
மென்தளிர் ஈன்று, போது விரிந்து
கண்ணீருஞ் சோர, நன்றறி மாந்தர் போல
நகை முக மலர்ந்தன மாதோ"

என்று கூறிச் சிறப்பிக்கிறார். பட்டுப்போன மரம் கூட இசை கேட்டுத் தளிர்த் தது என்றும் இசை அமுதத்தைப் பருகியதால் கண்ணீராகிய தேனைச் சொரிந்

தன என்றும், தமக்கு உறுதியாவனவற்றை அறிந்த மாந்தர்போல நகைமுகம் காட்டிற்று என்றும் கூறும் சிறப்பு படிப்போர் உள்ளத்தைக் கனிவிப்பதாகும். இவ்வாறு இறைவன் எளியோரை ஆட்கொண்டும், வலியோரின் செருக்கை அடக்கியும், உலகச்சம நிலைக்குப் பாடுபடுகிறான். ஏமநாதனின் செருக்கை அடக்க இறைவன் இசையைப் பயன்படுத்தி இசைவல்லானாப் உலக மக்களையும் மயக்கி அறியுமாறு செய்து, தன் பணியை முற்றுவிக்கிறான். அதேபோல வாழ, நைந்து மனம் கலங்கி எளியோனாக வந்த பாணபத்திரனைக் காப்பாற்றி அவனது புகழை மேம்படச்செய்கிறார். ஏமநாதனின் செருக்கை அடக்கவில்லை என்றால் மேலும் மேலும் அவன் செருக்குக்கொண்டு நிலையிற் தாழ்வான். குற்றம் புரீந்தவர்களை ஒறுப்பதே இறைவனதுகடமை. அதேபோல இங்கு, குறையிரந்தோருக்கும், குற்றம் புரிந்தோருக்கும் நல்வாழ்வு அளிக்கிறான். உலகில் நடக்கும் செயல்களை அறிந்து, வேண்டுதல், வேண்டாமையிலாது அவரவர் செய்கைக்கு ஏற்பத் தன் பணியைச் செய்துகொண்டேயிருக்கிறான். அவனை நாமும் இடைவிடாது ஏற்றித் தொழுவோமேயானால், அருள் புரிவது திண்ணம்.





உ

# இறையுணர்வு

கவி. M. பிரம்மாநந்தா, சிவகங்கை.

உலகத்திலுள்ள உயிர்வகைத் தோற்றங்களுள் மானிடராய்ப் பிறத்த
லரிது— ஆறறிவுயிராய் அதாவது ஐம்பொறி யுணர்வொடு நன்மை தீமையறியும்
பகுத்தறிவுள்ள மக்களாய்த் திகழ்வதால் மானிடப்பிறப்பு மேலாந்தன்மையுடை
யது-இம்மானிடப்பிறவியை எடுத்ததனுலாய பயனை மக்கள் கண்டறிந்து, அதற்
கொப்ப ஒழுகுதலே மேலான மார்க்கமாகும். உலகத்தின் கண் பிறந்த மக்கள்
பதி, பசு, பாசம் என்னும் முப்பொருளுண்மையைக் கண்டறியவேண்டும். 'பதி'
என்பது பேரறிவு கொண்ட இறைவன். 'பசு' என்பது சிற்றறிவு கொண்ட
ஜீவான்மா. 'பாசம்' என்பது உலக மாயை.

இவ்வண்ட சராசரங்களை. (அதாவது உலகம், அசைவன, அசையாதன)
படைத்தவன் எவனே அவனே இறைவன். எத்தொழிற்கும் கர்த்தா ஒருவன்
உண்டென்னுங் கொள்ளுந்தன்மையால் இறைவன் ஒருவன் உண்டென்பது
ஸ்திரமாகிறது. ஆட்டுபவனன்றி ஆடாதொன்றும். ஒரு சாரார் இவையெல்லாம்
இயற்கையாய் உண்டானது. இறைவன் ஏது? எங்குள்ளான்? என்பர்.
அவர்கள் கூறும் இயற்கையே இறைவன் என்பதாகும். இறைவனின் படைப்புத்
திறமையின் நுணுக்கத்தை இக்காலத்தில் விரிவாய் நடந்தேறிவரும் விஞ்ஞான
ஆராய்ச்சியே நன்கு புலப்படுத்தும். ஈஸ்வர சிருஷ்டி அளவிடற்கரிது—
இறைவன் நமது கண்ணுக்கு புலப்படாமையாலே, இறைவன் ஏது என்னும்
கொள்கையுடையார்க்கு முகாந்திரம் கூறப்புகின், "அவ்வாறு இறைவன்
சாதாரணமாய் கசடர்க்கும் புலப்படுவானுகில் அக்கசடன் 'எனக்கு கேட்ப
தெல்லாம் நீ கொடுக்கவேண்டும். தவறினுல் உன்னை நான் விட்டேனு பார்'
என்று ஆட்டிவைக்க ஆரம்பிப்பான். இவ்வாருயின் உலகம் ஏது? இறைவன்
ஏது? இறைவனின் மாட்சிமை எவ்வாருகும்? — இதற்காகவன்றே பக்தி
என்னும் வலையில் இறைவன் அகப்படக்கூடியவராயிருக்கிருர்.

மக்கள் இந்த ஜென்மத்தை எடுக்கவேண்டிய அவசியம் யாதெனக் கேட்
பின், இறைவனை யறியும் பொருட்டே. இறைவன் தன்னை அறியும் வரை பலவித
பிறப்புக்களைத் தருகின்ருர். மக்கள் தாம் கடைப்பிடிக்கும் கர்மத்துக்குத்

(செயலுக்கு) தகுந்தவாறு அதாவது நல்வினை தீவினைக்கேற்ப, பல ஜென்மங்கள் எடுக்க நேரிடுகிறது. அவ்வினைகளுக்கேற்ப இன்பமும் துன்பமும் மக்கள் தம் வாழ்க்கையில் இம்மையில் (இப்பிறப்பில்) அனுபவித்து, தேகத்தை விட்டு உயிர் பிரியுங்கால் நரகம் (துர்கதி) அல்லது மோக்ஷம் (நற்கதி) அடைய வேண்டிய தாகிறது. ஏனெனில் ஒருவன் குற்றம் செய்தால் தண்டனையடைவது போல.

பஞ்சபூதத்தால் (அதாவது மண், நீர், காற்று, தீ, ஆகாயம்) ஆகிய இத் தேகத்தின் ஐம்பொறி (மெய், வாய், கண், மூக்கு, செவி) வாயிலாக நல்லுணர் வைப் பெறுது, காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாச்சரியம் (பெண்ணாசை, கோபம், பேராசை, மயக்கம், செருக்கு, பொருமை) என்னும் அறுவகைப் பகையால், மனக்கட்டுப்பாடின்றி, உலகமாயையாகிய சிற்றின்ப அஞ்ஞானத்தில் உழன்று கட்டுண்டு, பெரிதென எண்ணி, ஆண் பெண் இருபா லரும் ஆணவமலங்கொண்டு, அதாவது நான், எனது என்னும் அகங்காரம், மமகாரம் (மமதை) கொண்டு இறைவனைச் சிந்தியாதிருக்கின்றனர். இத்தேக மும் இவ்வுலகப் பொருள்களும் அழியக்கூடியவையாதலால், நித்தியவஸ்து வாயிருப்பது பிரம்மம். அதாவது இறைவன் ஒன்றே. இறைவனை அறியவேண்டிய ஞானம் அவசியம் ஏற்படவேண்டும். அதற்கு மனவொருமை வேண்டும். இறைவன் எங்கும் நிறைந்திருக்கின்றார். சர்வவல்லமை, சர்வஞானம், அருளுந் தன்மையுடையவர்—நாமம் ரூபம் அற்றவர். அறிவதற்கு எட்டாதவராகவும் இருக்கிறார், ஆனால் தன்னை வணங்கும் அடியார்க்கு எளியனாகவும், அன்பு என்னும் வலையில் அகப்படுபவராகவும் இருக்கிறார்— மழைத்துளி மேட்டில் தங்காது பள்ளத்தை நோக்கி செல்லுமாறுபோல பணிவுடையவரிடத்தில் இறைவன் நிறைந்துள்ளார்— ஒவ்வொருவரின் உள்ளத்திலும் கோவில் கொண் டிருக்கிறார். உடலும் உயிரும் இணைந்த ஒன்றே போல, ஜீவான்மாவிடத்தில் இறைவன் இணைந்தும், ஆனால் உடல் வேறு உயிர் வேறு போன்று, இவ்வான்மா விடத்து தனித்தும் இயங்குகிறார். ஒவ்வொரு உயிர்க்கும் அருள்புரிந்து கொண்டிருக்கிறார்.

இறைவனை அறியும் ஞானம் வேண்டும். ஆணவமலத்தால் அதாவது அகங்கார குற்றத்தால் கட்டுண்ட ஒருவன் தான் யார் என்பதை உணர்ந்திடின் இத்தேகம் அநித்தியம் என்பதும் நித்தியமாகிய இறைவனை அறியும் ஞானமும் உண்டாகிறது. இதுதான் ஆன்மஞானம் எனப்படும். தன்னை அறிந்தவன் ஞானியாகிறான் உதாரணமாக:—

ஒரு வெங்காயத்தை எடுத்துக்கொள்வோம் அதைச் சமைப்பதற்கு முன் அதன் சருகுகளை (தோல்களை) உரிக்கிறோம். உரித்த வெங்காயத்தை கொஞ்சநாள் கழித்துப் பார்க்கின் சருகுகள் மேலும் உண்டாகி உரித்துக்

கொண்டே வருகிறோம். இவ்விதம் நாளுக்கு நாள் சருகுகள் உண்டாகி உரித்து விட்டால் கடைசியில் ஒன்றுமில்லாமல் வெங்காயம் என்ற நாமமே அற்று விடுகிறது. அது போன்று இந்த தேகத்தைப் பெரிதெனக் கொள்ளும் நான் என்னும் அகங்காரம் அகன்று கடைசியில் நிற்பது பேரறிவு ஒன்றே. நற் கருமத்தால் உண்டாகும் இப்பேரறிவால் ஜீவான்மா இறைவனோடு ஐக்கியமாகிறது.

இறைவன் உருவம் அருவம், அருவுருவம் (அதாவது உருவம்=ரூபம், அருவம்=அசரீரி இவ்விரண்டும் பக்தர்களும், அருவுருவம் (ஜோதிப் பிழம்பு) ஞானிகளுக்கும் (பெண், பொன், மண் இம்மூவாசையும் வெறுத்து ஐம்புலன்களை அடக்கியவர்களுக்கும்) இவைகளை தம்மை வணங்கும் பக்தர்களுக்குத் தகுந்தவாறு, காட்சிதந்து அருளுகிறார். தர்மம் குன்றி அதர்மம் ஓங்கும் சமயம் தர்மத்தை நிலைநாட்ட அவதாரம் எடுக்கின்றார். இறைவன் அருளும் வழி எவ்விதமெனக் கேட்கப் புகின் உதாரணம் கூறுவாம்

குழந்தை யழுகைக் குறிப்புணருந் தாய்போன்
றிழுக்கும் இறைஇ அருள்.

தாயார் வீட்டினுள் சமைத்துக் கொண்டிருக்கிறாள். குழந்தை வெளியில் விளையாடிக்கொண்டிருக்கிறது. கொஞ்சநேரம் விளையாடியபின் 'அம்மா' என்று கூப்பிடுகிறது. தாயார் "கொஞ்சம் பொறு" என்கிறாள், பிறகு குழந்தை வீறிட்டு அழுகிறது அழுகுரலைக்கேட்டு தாயார் அவசரமாக ஓடிவருகிறாள் அணைக்கிறாள்.

இதுபோன்று துன்புற்றிருக்கும் பக்தன் மனவொருமையோடு கண்ணீர் மல்கி, இறைவனைக் கூப்பிடின், தாயைப் போன்ற கருணாமூர்த்தியாகிய இறைவன் வந்து அருளுகிறான்—திருஞானசம்பந்தர் வரலாறு இதற்குச் சான்று.

"தனயனைத் தேடுந்தந் தைக்கொப்ப ஈசன்
நினைக்கும் அடியர்பால் நின்று"

இராஜகுமாரன் அரண்மனையை விட்டு வேட்டையாட காட்டுக்குச் செல்கிறான். வேடுவர் கையில் சிக்கி வேடுவர் பிள்ளைகளோடு பிள்ளையாக வெகு நாள் விளையாடிக்கொண்டிருக்கிறான்—இராசன் தனது குமாரன் வராததுகண்டு, காட்டிற்கு நேரிற் சென்று, அவ்வேடுவப்பிள்ளைகளுள் தன் குமாரனைக் கண்டு "நீ எனது பிள்ளையல்லவா?" என்று கூப்பிட்டு அழைத்துக்கொண்டு போகிறான்.

இதுபோன்று வேடுவர்களாகிய காம, குரோத, லோப, மோக, மத மாச்சரிய மாகிய அறுவகைப் பகைவருடன் உழன்று, பின் மனத்தை அடக்கி

அறுவகைகள் நீங்க, தீவிர ஞானடக்குவம் ஒருவன் அடையுந்தருணத்தில் இறைவன் நேரில் வந்து பிள்ளையைப் போன்ற பக்தனை அழைத்து குருவாயிருந்து ஞானோபதேசம் செய்து நற்கதி அருளுகிறார். இதற்கு மாணிக்கவாசகர் வரலாறு சான்று.

இவ்விரண்டு உதாரணங்கள் நாம் நேறில்கண்டது போன்று ஹிந்து சமயப் பெரியார்களிடம் நடந்திருத்தல் ஆராய்ச்சிக்குயரிது,

இவைகட்கு வேத வாக்கியம் வருமாறு :—

'ஓம் பிதா நோ'ஸி. பிதாநோ ' 'போதி. நமஸ்தேஸ்து. பிதா கோ'ஸி

ஓம் என்பது பூரணத்துவம். முடிவில்லாததும், தெளிவுற்றதும், அழியாப் பொருளுமானது என்கிற அர்த்தத்தைக் காட்டக்கூடிய அடையாள மொழி. இது ஓர் பொது மந்த்ரம். பிரணவம் என்பது.உலகத்து ஓசை யெல்லாம் இம்மந்த்ரத்தில் அடங்கும்.

'நீ எங்களுடைய பிதா. எங்களுக்கு ஞானத்தைக்கொடு. உனக்கு நமஸ்காரம் —. நீ எங்களுடைய பிதா —'

இங்கு இரண்டாந்தடவையுள்ள, வாக்கியம் பிதா என்பதை வலியுறுத்து கிறது—.

உலகில் மனிதர் கடைப்பிடிக்கும் கொள்கையை சமயத்தை இரு பிரிவாகப் பிரிக்கலாம்—அதாவது. (1) உலகாயதம். (2) ஆஸ்திகம். உலகா யதம் அனுஷ்டிப்போர் உலகின் இன்பமே பெரிதெனக் கோரியும் இறப்பதே மோக்ஷம் என்றும் கொள்கையுடையார். இது நிரீச்சுரவாத சமயம்என்பது.

இறைவன் உண்டென்றும், இறைவனே பெரியவனென்றும் கொள்கையுடையார் ஆஸ்திகர் எனப்படுவோர்.

உலகின்பம் பெரிதெனக் கொள்வோமாயின், இது ஒரு கூற்றாகவே தோன்றும். மெய்ஞ்ஞானிகள் "இறைபுணர்வே மேலாம் இலக்கு" என்றும் இறைவனே பெரியவனெனவும் அருளியிருக்கிறார்கள், விளக்கம் வருமாறு :—

"ஈஸோஸ்ய பரம கதி :
ஈஸோஸ்ய பரம சம்பத்
ஈஸோஸ்ய பரமோ லோக :
ஈஸோஸ்ய பரம ஆனந்த :"

That is the Supreme Path of This,
That is the Supreme Treasure of This
That is the Supreme world of this
That is the Supreme Joy of This.

இதற்கது பரம கதியே
இதற்கது பரமசம் பத்தே
இதற்கது பரம லோகமே
இதற்கது பரமா னந்தமே.

இது = இவ்வுலக (இன்பம்)
அது = இறை (இன்பம்)
பரம = மேலான.

இப்பாரத பரம்பரை சிந்தனை வரலாற்றுப்படி, தாய் கர்ப்பத்திலிருந்து இவ்வுலகின்கண் மனிதனுப் உதிக்குங்காலை, அவன் பிறப்பை இரண்டு பிறப்பாகப் பிரிக்கலாம். தாய்வயிற்றிலிருந்து உதித்து சாதாரணமான மனிதனுக ஆகும் தன்மைதான் முதற் பிறப்பு. பிறகு இறையுணர்வு உண்டாகும் தன்மை இரண்டாவது பிறப்பு.

அவன் கண்டறியும் அனுபவங்களை ஒட்டி மூன்று பிரிவுகளாகப் பிரிக்கலாம்.

(1) ஞேயம் (2) ஞானம் (3) ஞாதா

ஞேயம்: என்பது அறியப்படுவது. (அறிய வேண்டிய பொருள் மொத்தம்.) இது சாஸ்வதமும், முடிவற்றதும், சாதாரண அறிவிற்குத் தெரியாததாயும் உள்ளது.

ஞானம்: என்பது பகுத்தறிவுள்ள ஒருவன் அடைந்துவரும் அனுபவ ஞானம்.

ஞாதா: என்பது அந்தப் பகுத்தறிவுள்ள மனிதனே.

ஆகையால் அறியப்படவேண்டிய பொருள் அளவில்லாததாயிருப்பதினுலன்றோ, உபநிஷத் ஞானிகள் பின்வருமாறு சொல்லியிருக்கிறார்கள்.

"ஓம் அஸதோ மா ஸத்கமய
தமஸோ மா ஜ்யோதிர் கமய
மிருத்யோ மா அமிர்தம் கமய
ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:"

"தீமையி னின்றெனை நன்மை பெறச்செய்
இருளி லிருந்தெனை ஒளிதனை பெறச்செய்
மரணத்தி னின்றெனை இறவாமை பெறச்செய்
சாந்திமுக் காலமும் உலகினில் நிலவுக.''

இதற்குப் பொருள் யாதெனில்

இறைவனே தீமையிலிருந்து என்னை நன்மைக்கு அழைத்துச்செல்
இருளிலிருந்து (அஞ்ஞானத்திலிருந்து) என்னை வெளிச்சத்திற்கு (ஞானத்திற்கு) அழைத்துச்செல்
சாகுந்தன்மையிலிருந்து சாகாத்தன்மைக்கு அழைத்துச்செல் என்பதாகும்.

இன்னும் உபநிஷத்ஞானிகள் இறைவனை வேண்டுவது யாதெனில்,

"ஓம் ஸ்வரூப நிரூப ஹேதவே ஸ்ரீ
சிவானந்த குரவே நம :"

ஓம் சாந்தி : சாந்தி : சாந்தி :

'உரூபா ரூப பேதகா ரணமாய்
சிவானந்தமாகிய குருவே போற்றி.'

இதன் பொருள் :

ரூபியாயும் அரூபியாயும் உள்ள காரணத்தாலே சிவானந்தமாகிய குருவுக்கு நமஸ்காரம்.

"ஓம் ஆப்யாயந்து மமாங்காநி
சர்வம் பிரம்மோ நிஷதம்''

ஓம் சாந்தி : சாந்தி : சாந்தி :

"எல்லா உபநிஷத் துள்ள பிரமம்,
எந்தனங் கங்களை காக்கக் கடவது''

இதன் பொருள்

எல்லா உபநிஷத்துக்களில் அடங்கியிருக்கும் பிரம்மத்தால் என்னுடைய அங்கங்கள் காப்பாற்றப்படட்டும், அங்கங்கள் = தேகஉறுப்புக்கள்.

மேற்கண்ட 3 உபநிஷத் வாக்கியங்களை இறைவன் பேரில் ஒவ்வொருவரும் அவசியம் தியானிக்க வேண்டியது. பஞ்சாக்ஷரம், ஷடாக்ஷரம், அஷ்டாக்ஷரம் என்னும் மந்திரங்கள் உள. அவரவர் விருப்பப்படி எம் மந்திரத்தை தியானித்தாலும் பயன் ஒன்றே. 'வடமொழி தென்மொழி சிவனுக்கிருவிழி, என்றதற்கிணங்க, எந்த மொழி தோத்திரங்களாயினும் அவரவர் விருப்பப்படி ஓதலாம்.

நாம் தினே தினே ஜபிக்கிம் காயத்திரி மந்திரமும் எல்லாம் வல்ல இறைவனேயே வலியுறுத்துகிறது.

ஓம் பூர் புவ : ஸ்வ : | தத்பெவிதுர் வரேண்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி தியோ யோ ந:

இதன் பொருள்

ஓம்–இங்வோங்கார சப்தம் பரமேஸ்வரரின் சர்வோத்தம நாமமாகும்

பூ :—சகல உலக ஜீவனுதாரன், உயிரினும் பிரியமானவன், தன்னுட் தானுனவன் ஆகிய கடவுளின் பெயர்.

புவ :— சகல துக்கரகிதன், எவனின் சேர்க்கையால் ஜீவன் சகல துக்கங்களேயும் நீக்கிக்கொள்ள முடியும் அவனுகிய கடவுளின் பெயர்,

ஸ்வ :— எல்லா உலகங்களிலும் வியாபித்து அவைகளேத் தரித்திருப்பவ னெவனே அவனின் பெயர்.

சகல சுகங்களே அளிப்பவன், எவனேயடைய சகலரும் நற்காரியங்களே புரிகின்ருர்கள், அக்கடவுளின் ஸ்வீகரிக்கத்தகுந்த அதிமேன்மையான சுத்த ஸ்வரூபத்தை நாமனேவரும் தரிப்போமாக எதற்காக வென்ருல் அக்கடவுள் நம்முடைய அறிவை ப்ரேரேபிப்பதற்காக எனின் கெட்ட காரியங்களே விலக்கி நல்ல காரியங்களில் செலுத்தவேண்டி அச்சுத்த ஸ்வரூபத்தை நாம் தரிப்போமாக.

இறைவனே அறியும் அடையும் மார்க்கமே சமயம் அல்லது மதம். தேசம் பலவாதலால் ஒவ்வொரு தேசத்தினரும் ஒவ்வொரு சமயத்தை அனுஷ்டிக் கிருர்கள். எல்லாநதிகளும் கடைசியில் கடலில் சங்கமமாதல் போன்றும்: ஓர் ஊரை அடைவதற்கு பாதை பல இருத்தல் போன்றும் பல சமயங்கள் உள்ளன. எது நல்லவழி, சுருக்கவழி என்பதை ஆராய்ந்து செல்லுதற்குரிய ஹிந்துமதம் ஆலமரத்தைப்போன்ற பெரியமதம். இலே, மலர், காய், கனி, என வரையறுத்து தெள்ளிதிற் கூறும் பழைமையான மதம். இருப்பினும் சமயப் பூசல்களுக்கு அடிகோல வேறுபாடு காட்டக்கூடாது. மற்ற மதங்களே சகமதம் அதாவது துணேமதம் ஆகக்கருதி, நல்லவைகளே அனுசரிக்கவேணும். சாதியென்று வகுத்துக்கொண்டது மனிதனேயாதலால் எல்லா சாதியினரும் இறைவனுக்குச் சமமே. சொல்லப்புகின், ஒழுக்கம் உயர்குலம் இழுக்கம் அதாவது ஒழுக்க மில்லாமை இழிகுலமென சாற்றுதல் துணிபு

இறைவனே அவரது கல்யாண குணங்களுக்கேற்ப பல நாமங்களால் அழைக்கிருேம். சிவன் என்ருல் நன்மையை அருளுபவன் என்றும், விஷ்ணு

என்ருல் எங்கும் நிறைந்தவன் என்றும், பிரம்மா என்ருல் சர்வ ஞானத்தை யுடையவன் என்றும்; சுப்பிரமணியர் என்ருல் பிரம்ம ஞானத்தை உணர்த்துபவ ரென்றும், கணபதி என்ருல் அடியார் கூட்டத்திற்கு அதிபதி என்றும், இவ் விதம் பொருள்படும். பரப்பிரம்மம் ஒன்றே— சிருட்டி, திதி, சங்காரம் என்னும் முத்தொழிற்கேற்ப, பிரம்மா வென்றும், விஷ்ணு வென்றும், சிவ னென்றும் முறையே அழைக்கிரேம்.

நற்குண நற்செயல்களை அந்தந்த சமயத்திற்குரிய வேதாகம நீதி நூல் களை உணர்ந்து அறநெறி, அருள்நெறி அறிந்து ‘ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்’ என்ற மொழிக்கிணங்க, ஜாதி, மதம், வகுப்பு (வகுப்பு என்பது சைவம் வைணவம் போன்றன) வித்யாசம் பாராட்டாமல், தத்தமக்கு இயல் பாகக் கிடைக்கப்பெறும் கருமங்களை அதாவது தொழில்களை ஒழுங்குற ஆற்றி, எத்தொழிலையும் இழிதொழில் என்னுது தம்கடமையை தவருதும், இன்னல் இன்பம் வரினும் ஒரே மனத்தினனுகி கருமத்தின் பயனை எதிர்பார்க்காமல், விருப்பு வெறுப்பின்றி கடமையைச் செய்து, எல்லா உயிரிடத்திலும் இறைவன் குடிகொண்டுள்ளபடியால் யாவரிடத்திலும் அன்புகொண்டு, சாந்தம், சத்தியம், கொல்லாமை, சகோதரத்துவம், ஒழுக்கம் முதலிய நற்பண்புகளும் பொருந்தி திரிகரண சுத்தியோடு (மனம், மொழி, சரீரம்) இறைவனை நித்தியமும் தியானித் துக்கொண்டும் வருதலே சன்மார்க்கமாகும்.

உண்டுண்டுறங்குவதும், உடலால் உழைக்காதும், உள்ளத்தில் சிந்தி யாதும் இப்பிறவியின் காலத்தை வீணுக்கின் துன்பத்திற்கே ஏதுவாகும். “இப்பிறவி தப்பினுல் எப்பிறவி வாய்க்குமோ?” என்றஞ்சி இப்பிறவி எடுத்தத னுலாய பயனை உணர்ந்து திரிகரண சுத்தியோடு நமது கடமையைச் சரிவரச் செய்வோமாயின், கிடைத்தற்கரியது கிடைக்கும் என்பதற்கையமில்லை.

நாம் புரியும் தொழிலுக்கேற்ப, இறைவனை தனியாக சிந்தித்து தியானிக் கப்போதுமான நேரமில்லையே என ஏங்குவாரும் உளர். அவ்வாறுள்ளோருள்பட எல்லோருமே, காலையில் சூரியோதயத்திற்கு முன்பாக உலகம் உறங்கியும் விழிக்காதிருக்கும் காலமாகிய பிராமீ முகூர்த்தத்தில் (அதாவது 4 மணிக்கு) எழுந்திருந்து உடம்பு உள்ளம் சுத்தத்தோடு இறைவனை தியானித்தல் மிக மிக நன்று. இக்கொள்கையை அனுஷ்டித்துக்கொண்டே நாம் கருமங்களை இறை வனுக்கு அர்ப்பணமாக செய்துவருவோமாயின், நம் உடலைவிட்டு உயிர்பிரியுங் காலையிலும் ஈஸ்வர நாமத் தியானமே நம் முன் நிற்கும். இவ்விதம் செய்ய வில்லையெனின் உலக பந்தமே நம்முன் நிற்கும். பலவித பிறப்புக்களுக்கு ஏதுவாகும்—.

கடவுளை வழிபடும் வழிகள் யாதெனக் கேட்பின், மனம் எப்போதும் ஸ்திரமாயிருப்பதில்லை—சலனமுடையது. அதாவது அலையும் தன்மையுடையது. பொதுவாக உருவத்தைக் கண்டுதான் மனவொன்றிப்பு உண்டாகும். அதாவது மனம் லயிக்கும். இதற்காகவே கோவில், கடவுள் பிம்பமாகிய விக்ரஹ ஆராதனை நம் ஆன்றோர்களால் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. 'கோவில்' என்பது இறைவன் உறையும் பரிசுத்தமான இடம். 'கோவில் எதற்கு விக்ரஹம் எதற்கு' எனக்கேட்பின், உதாரணமாக. பசுவிடத்தில் பால் கறக்கும்பொழுது உடம்பில் பால்மயம் இருந்த போதிலும், பாலானது மடுவில் மாத்திரம் சுரக்கிறது போல், இறைவன் கோவில் என்னும் பரிசுத்தமான இடத்தில் இனிது உறைகின்றபடியாலும், இறைவன் பால் மனம் லயித்தல் அடைவதற்காக விக்ரஹ ஆராதனை ஏற்பட்டிருக்கிறது. மனவொன்றிப்பு இறைவன்பால் அதிகரிக்க, கோவிலுக்கு போகவேணும் என்ற அவசியம் இராது. இருந்த இடத்திலேயே மனப்பரிசுத்தத்தோடு தொழுதல்போதுமானது—. கடவுளைத் தோத்தரிக்க சுருங்கக்கூறின் எச்சமயத்திலும் தான் புரியும் கருமங்களினூடே, கடவுளை தியானித்துக்கொண்டு வருகிற வழக்கம் செய்து தன்னையும் மற்றும் எல்லோரையும் காப்பாற்றவும், நல்வழியில் நடத்துமாறும் பிரார்த்தனையில் இறைவனிடம் முறையிடவேண்டும். தன்னலத்துடன் பிறர் நலத்தையும் கோரவேண்டும். அதுதான் மனிதப் பண்பு.

எல்லாம் வல்ல இறைவனுகிய சிவபெருமான் எல்லா ஜீவான்மாக்களுக்கும் அவரவர்களின் பக்குவத்திற்கொப்ப, பிதாவாகவும் குருவாகவும் தெய்வமாகவும் நின்று விளங்குவதுடன், அவர்கள் உய்யும் வண்ணம் உருவெடுத்து அநேக திருவிளையாடல்களும் புரிந்திருக்கின்றார். மதுரைமா நகரில் வீற்றிருக்கும் சிவபெருமான் புரிந்தருளிய 64 திருவிளையாடல்களில் சிவபெருமானே உலகிற்கு வழிகாட்டியாக 'இம்மையிலும் நன்மை தருவார்' என்ற இலிங்கத்தை ஸ்தாபித்து பூஜித்த திருவிளையாடலை அடியிற்கண்ட பாட்டால் நோக்கி, இறைவனை எக்காலமும் தியானிப்போமாக,

அறுசீர் சந்த விருத்தம்

(அங்கிங்கெ னுதபடி என்ற சந்தம்)

துதி

உலகெக்கு மூடுறுவி யுயிர்க்குயி ராகிநின்
றாட்டும்ப்ர காசவடிவாய்
உரியமது ரைப்பதியில் வீற்றிருந் தருள்கின்ற
உமைபாகன் சுந்தரேஸ்வரர்

உலகிலான் மாக்களுய் யப்பாண்டி மன்னனுய்
　　உருவெடுத் தாசாட்சி செய்
துகப்புடன் மும்முலைத் தடாதகைப் பிராட்டியை
　　உம்பர்தொழ மணம்புரிந்து
நலந்தரும் சிவபூசை செய்திடச் செகமறிய
　　நடுவூரில் நகராலயம்
நாட்டமுட னமைத்திலிங் கம்பிரதிட் டைசெய்து
　　நாளும்பூ சித்தசிவமே
வலந்தரும் இம்மையிலும் நன்மைதரு வாரென்ன
　　மாதேவன் றன்பிரானே
மனமுருக வுனதடிகள் வணங்குகின் றேமெமது
　　மன்னுசித் திகளருளவே.

சுபம்



யாகசாலையில் கலந்து கொண்ட சிவாச்சாரியார்கள்.



யாகசாலையில் திருமுறைப் பாராயணம்.



# "பக்தி நெறியும் சக்தி ஒளியும்"

ஸ்ருங்ககிரி ஸ்ரீ சாரதா பீடம் ஜெகத்குரு
ஸ்ரீ நரஸிம்ஹ பாரதி ஸ்வாமிகளின் சிஷ்யர்
**ஜோதிநாத வளையாபதி சித்தர்**

—×—

இம்மையிலும் நன்மைதருவார் இணையடி மலர்கள் போற்றி!
நம்மையாள் நடுவூர் நாயகியின் நளினவடிகள் போற்றி!

யாம் இரப்பவை, பொருளும், பொன்னும், போகமுமல்ல, நின்பால், அருளும், அன்பும், அறனும், மூன்றும், என்று, துறவு நிலைக்கு வேண்டியதைப் பாடினர், கடுவன் இளவெயினனர், என்ற பெரும்புலவர். இம்மையிலே வாழ்வதற்குப் பொன்னும், பொருளும், போகமும், வேண்டிப்பாடி, மறுமையிலும், பேரின்பநிலைக்கும் படி, தன்னுடைய பாடல்களையே, ஆண்டவன் கட்டளைப்படி, அருச்சனைகளாக்கி, இகத்திலும், பரத்திலும், இன்பமுற்றவர், சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள். ஆதலின் எங்கு வாழ்ந்தாலும், இறைவனருளின்றி வாழ இயலாது! இதை "அவனன்றி ஓரணுவும் அசையாது" என்று தாயுமானரும்,

"யஸ்ச்சாபி ஸர்வ பூதானும் பீஜம் ததஹம் அர்ஜுன!
நததஸ்தி வினபத்ஸ்யான்மா பூதம்சராசரம்"

Arjuna! No Spirit except me can rotate the whole universe! என்னையன்றி, இந்த உலகத்தை எந்த சக்தியாலும் நடத்திச்செல்ல முடியாது, என்று கிருஷ்ணபரமாத்மா பகவத் கீதையிலே அர்ஜுனனுக்கு உபதேசித்தருளினர். ஆதலின் இம்மையிலும், மறுமையிலும், வாழ்வுபெற கடவுளின் சக்தி நமக்குத்தேவை, அத்தேவையின் ஞாபகத்தை, அஞ்ஞாபகத்துக்கு உணர்ச்சியை, அவ்வுணர்ச்சிவேண்டும். கருத்துக்களை, அக்கருத்துக்களில் அலசி ஆராய்ந்து பெறவேண்டிய பொருள்களை, அப்பொருள்களை அநுபவிக்கும் ஆற்றலை, அக்கடவுளே தான் தரவேண்டுமென்பதை, நாரத பக்தி ஸூத்ரத்தில்,

"லப்யதே அபி தத்க்ருப யைவ"

It is got through his grace only, என்றும்

மணிவாசகப்பெருந்தகையார் —

"அவனருளாலே அவன் தாள் வணங்கி" என்றும்,

அருணகிரிநாதர் அநுபூதியில் —

"யாமோதிய கல்வியும் எம்அறிவும்
தாமேபெற வேலவர்தந்ததனுல்" என்றும்

எடுத்துக்காட்டி, நம்மை ஈர்க்கின்றனர், இறைவனருள் விளைவிக்கும், இன்ப நிலைக்கு!

இறைவன் எங்குமிருக்கிறுன்! இறைவனை எங்குதேடுவது? இறைவனுடைய உரு எப்படி? வழிபாடு முறை என்ன? இப்படி ஒரு குழப்பம். இக்குழப்பங்களை நீக்கவே! முப்பத்திரண்டு தருமங்களையும் முறையே ஆற்றவே! அவனியில் அருஞ்செங்கோலோச்சி, அறங்களின் அருமைகளை அரசாட்சிமூலம் காட்டவே! அவதரித்தாள் அங்கயற்கண்ணியான மீனுக்ஷி அழகு மதுரையிலே!

ப்ரஹ்ம ஸூத்ரத்திலே:— "அத ஏவ சோப மா ஸூர்யகாதிவத் = For that chief reason, We respect Brahmam, Compared as the image of the sun, — சூர்யனைக்கண்டால் கண்கூசும், சூரிய ஒளியில் இறைவன் இருக்கிறுன், சூரியனை நீண்டநேரம் பார்த்து அநுபவிக்க இயலாது, ஆதலின் சூர்யனைப்போல் ஒரு சிலையை உண்டாக்கி, அச்சிலையை மந்த்ரபூர்வமானகிரியைகளுடன் சூரியதேவனை உருவாக்கிய, முக்கிய காரணம் உலகுக்கே ப்ரத்யக்ஷமாய் ஒளிகொடுக்கக்கூடிய கடவுள் சூர்யதேவனே என்று வணங்குகிருேம்,

"ச உ பாமா = Compared Sun with an image = சூர்யனுக்கு உபமானமாய் ஏற்பட்ட சிலையையே சூர்யனுக பாவித்து, கோயிலில் ப்ரதிஷ்ட்டைசெய்து வணங்கி, வணங்கி, உடலைக் கோயிலாக்கி, உள்ளத்திலே ஒளியை நிலை நிறுத்தி பேரின்பம் அடைகிருேம்!

அணில், ஆடு, இலை, ஈ முதலிய படங்களைப் பார்த்துப்பார்த்து, அ. ஆ. இ. ஈ. என்று எழுத்துக்களைப்படித்துப் படித்து, கலை ஞனுவது போல, உருவைத் தெரிசித்து, நினைத்து, த்யானித்து, பூஜைகள் செய்து, தவத்திலீடுபட்டு, சரியையால் அரும்பாகி, கிரியையால் பூவாகி, யோகத்தால் காயாகி, ஞானத்தால் பழுத்து, இறைவனின் இணையிலா அன்பைப்பெற்று, அவனுடனே இசைந்து வாழும் இன்பநிலையைப்பெறவேண்டும். இதற்காகவே உபமானமாக சூர்யனைக் காட்டினுர்கள் மூதறிஞர்கள்! எங்கும் நிறைந்த இறைவன் ஜோதி வடிவானவன் என்பதை :—

ஸூர்ய நமஸ்க்காரங்களாலும், "ஸூர்யஸ்ச," "ஆப்ராஜ்யாவா" "இமம்மே" "அக்னிச்ச" என்று துவங்கும் ஸந்த்யாவந்தன மந்திரங்களாலும், அதிக தவவலிமையுள்ள ராவணனை வெல்ல, ராமருக்கு "ஆதித்யஹ்ருதயஸ் தோத்திரத்தால்" அநுக்ரஹம் செய்த அகஸ்த்யரிஷிகளாலும், "ஆதியந்த மாயினுய் ஆலவாயில் அண்ணலே, சோதியந்தமாயினுய் சோதியுள்ளே சோதி யாய்," என்ற சம்பந்தர் தேவாரத்திலும், "சொற்றுணை வேதியன் சோதி வானவன்" என்ற அப்பரின் அருள்வாக்கிலும், "ஆதியுமும் அந்தமுமில்லா அரும்பெருஞ் சோதியை" என்று திருவாசகத்திலும், "சோதிமணி பீடமிட்ட மட மேவீ" என்று திருப்புகழிலும், "வையம் தகளியாய் வார்கடலே நெய்யாக, வெய்யகதிரோன் விளக்காக" என்று திவ்யப்ரபந்தத்திலும், "அருட்பெருஞ் ஜோதி" என்று அருட்பாவிலும், "சோதியாய்ச் சுடருமாகி மாதிரப்புயமுமான" என்று மஹான் மஸ்த்தான் ஸாகிபு அவர்கள் பாடலிலும், "Heaven's light is our guide" அருட் சோதியே நம் துணை, என்று க்றிஸ்து பெருமான் பொன் மொழிகளிலும், "Light! My light! Eye Kissing light! Heart sweetening light! Ah! My Darling Light! = ஜோதி, என்ஜோதி! கண்களை முத்த மிடும் ஜோதி, உளமினிக்கும் ஜோதி! என் பளபளக்கும் ஜோதி! என்று டாகூர், கீதாஞ்சலியிலும், கடவுள் உருவை ஜோதியாக்கி, அச்சோதியை சிலை வடிவாக்கி, அச் சிலையிலேயே லயித்து, அந்துலயத்தில் மூழ்கி ஒளிபெற்று கடவுளை அடைய வேண்டும் என்ற விபரங்களை புரிந்துகொள்கிறோம்.

ஆதலின் பல பெரியார்கள், வாழையடி வாழையாக நம் சமூகம் வளர, பக்திப்பாதையில் நேராக நடந்து, பரமனின் சந்நிதானத்தையடைய, ப்ரஹ்மா, விஷ்ணு, இந்த்ரன், சிவன் முதலிய உருவங்களை உண்டாக்கி, அவ்வுருவங்களின் தத்துவங்களை, பல பேரறிஞர்கள் மூலம் விளக்கி, நம்மை பேரின்பப்பாதைக்கு அழைக்கின்றனர்! உலகம் சுற்றினேன்! உலகம் பூராவும் பார்த்தேன்! என்று யாராவது கூறினுல் நாம் சிந்திக்கிறோம். உலகை எப்படிச் சுற்றினுன்? எப்படிப் பார்த்தான்? எல்லா இடங்களையும் எப்படிக் கண்டான்? இந்த சந்தேகங்களைப் போக்கவே :— "அண்டப்பகுதியினுண்டைப் பிறக்கம்" "உலகம் உருண்டை வடிவு" என்றார் மணிவாசகர்!

இக்காலத்தில் நம் முதியோர் காட்டிய வழியில், உட்கார்ந்த இடத்தி லிருந்தே உலகம் பூராவையும் பார்த்துவிடுகிறோம்! "Globe" குளோப் என்ற பந்துபோன்ற ஒருவடிவில், கண்டங்கள், உபகண்டங்கள்: தேசங்கள், ஆறுகள், மலைகள், முதலிய எல்லாவற்றையும் சுலபமாக பார்த்துவிடுகிறோம். அம்முறை யிலே தத்துவம் நிறைந்த மூர்த்திகளை சிலைகளாக்கி, அண்டத்திலேயுள்ளது, பிண்டத்திலேயும் உண்டு, அண்ட பிண்ட சராசரங்களுக்கு எல்லாம் இறைவன் ஒருவன், "எவரெவர் எந்தெந்த ரூபத்தில் வேண்டுகிறார்களோ? அந்தந்த

ரூபத்தில் காக்ஷியளிப்பேன்'' என்று க்ருஷ்ணபரமாத்மாவின் கீதை ஸ்லோகத்தை கண்டு, லயித்து லயித்து, உடலைக்கோயிலாக்கு, உள்ளத்திலே ஒளி இறைவனைக் குடிவைத்த பூசலார் நாயனார்நிலையை நாமும்பெற, வழிகாட்டியாய் இயங்குவது கோயில்கள்! ஆலயதெரிசனத்தால் ஆத்மசக்தியைப்பெற்று, விவேக சூடாமணி ஸ்லோகப்படி:—

"ஸ்வயம் ப்ரஹ்மா, ஸ்வயம்
விஷ்ணுஹு, ஸ்வயமிந்த்ரஹ,
ஸ்வயம் சிவஹ, ஸ்வயம் விச்வமிதம்
ஸர்வம், ஸ்வஸ்மா தன்யன்ன, கிஞ்சன்ன, = Self is Brahma, Self is Vishnu, Self is Indhra, Self is Siva, Self is whole world, Nothing beyond except Self. நம்முளே இருக்கிறார்கள், ப்ரஹ்மா, விஷ்ணு, சிவன், இந்த்ரன், உலகம் முழுவதுமே கூட, என்ற மேல் நிலைக்கு வழிகாட்டியாய் விளங்குவது நம் நாட்டுக் கோயில்கள்! ஆலய வழிபாட்டால் தான் ஆத்மசக்தி பெறலாம்!

இப்பேருண்மையை, எடுத்துக்காட்டவே, உலகம் போற்றும் உமாதேவியார், மீனாக்ஷியாக அவதாரம் செய்து, சொக்கலிங்கக்கடவுளை மணந்து மக்களினம், மாநிலத்தில், மகிமையானகடவுளின் மலரடிகளைப் பூஜித்து, மாண்புற வாழவேண்டும் என்ற பெருநோக்குடன், மதுரையம்பதியில், ஓர் உன்னதமான ஆலயம் உண்டாக்கி ஆக்கோயிலில், "இகாபீஷ்ட வரப்ரதாயகர்" "இம்மையிலும் நன்மைதருவார்" என்ற சிறப்பான பெயருடைய சிவலிங்க ரூபத்தையும், "மத்யபுரி நாயகி" "நடுவூர் நாயகி" என்ற நல்லெழில் அம்பிகையும், ப்ரதிஷ்டை செய்து, திருமணக்கோலத்துடனேயே, சதிபதிக ளாகிய, மீனாக்ஷிசுந்தரேஸ்வரர் இருவரும் பூஜித்து, இம்மையில் நன்மை பெற இம்மதுரைமாநகர் என்றும் இன்பப்பூங்காவாக இலங்கிவாழ, வேண்டிப்ரார்த்தித் திருக்கின்றனர் என்றால், இக்கோயிலின் பெருமையை, என்போன்றோரால் எடுத்துச் சொல்ல முடியுமோ? இவற்றை எழுதியதே இறைவனருள்தான்! கடவுள் உலகெங்கும் வியாபித்திருக்கிறார் என்பதற்கு, இக்கோயிலில் இறைவனே சாக்ஷி! நாடுகளைப்பற்றி, பேசும் போதும், எழுதும் போதும், கீழ்நாடு, மேல்நாடு, என்று இருதிசை களையும்தான் குறிக்கிறோம். இக்கோயிலின் இறைவன், ஸ்ரீ மீனாக்ஷி சுந்தரேஸ்வர சதிபதிகள் பூஜைக்கும்சரி, பக்தர்களின் தெரிசனத்திற்கும் சரி. கிழக்கிலும்-மேற்கிலும் காட்சியருளி எங்கும் நிறைந்தபரம் பொருளாய் விளங்குகிறார்.

எங்கள் ஸ்ருங்ககிரிபீட குருநாதர்ளின் ஆசிகளைப் பெற்றது சிவகங்கை சமஸ்தானம், இந்தசமஸ்தானதது அரசர்களில் என்னிடம் பூரண அன்பும்,

பக்தியும் கொண்டவர்கள், இளைய அரசர் ஸ்ரீ D. சுப்ரமணிய ராஜகுமார். அவர்கள் அன்பினாலும், இறைவன் திருப்பணிகளிலேயே லயித்து, "என்கடன் பணி செய்து கிடப்பதே" என்ற அப்பரடிகளின் கொள்கையைக்கொண்டு, இடையறா அன்பு பூண்டு இறைபணி புரியும், சிவகங்கை தேவஸ்தானங்களின் மானேஜர், ஸ்ரீஜெயராமய்யர் அவர்களின், அன்புத் தூண்டுதலாலும், அன்பர்களின் ஆதரவுகளாலும், சிவகங்கை தேவஸ்தானத்திருக்கோயிலாக மதுரையில் விளங்கும், "இம்மையிலும் நன்மைதருவார், நடுவூர் நாயகி" கோயிலைப்பற்றி, ஸ்ருங்ககிரி பீடம் குருநாதர்களை வணங்கி, ஸ்ரீ சாரதாம்பாளின் அருளைக் கொண்டு எழுதியிருக்கிறேன்.

"இம்மையிலும் நன்மைதருவார் இணையடி மலர்கள் போற்றி!
நம்மையாள் நடுவூர் நாயகியின் நளினவடிகள் போற்றி"

என்றும் நன்றே ஒன்றி வாழ்வோம்!

---

# நன்மைதருவார் துதி

கவியோகி சுத்தானந்தபாரதி.

---

காலத்தேரை நடத்திடுவார்
கருணையழகு பூத்திடுவார்
கோல மீனம்பிகை யழகர்
கொண்டாடிடும் எண் குணத்தார்
சீலரான தொண்டருக்குச்
சிறந்த வரங்க ளீந்திடுவார்
ஞாலமுழுதும் புரந்திடுவார்
நன்மை தருவார் போற்றியவே.

# நன்மை தருவாரும் தீமை தருவாரும்

வித்துவான் தா. குருசாமி
தமிழாசிரியர், கழக உயர்நிலைப்பள்ளி,
திருப்பூவணம்.

மக்களாய்ப் பிறந்தோர் மாண்புடன் வாழ நினைகின்றனர்; இன்பமே வேண்டி அலைகின்றனர்; துன்பத்தைக் கண்டு துவள்கின்றனர். இன்ப துன்பங்கள் வாழ்வின் இருமுனைகள், இன்பங்கிட்டிய பொழுது மகிழ்வதும் துன்பங் கிட்டியபொழுது வருந்துவதும் நம்போன்றோரியல்பு.

இன்பதுன்பப் பிடிகளிலிருந்து நீங்குவதே பேரின்பம். பேரின்பத்துத் தலைப்பட்டார் இன்பத்துள் இன்பம் விழையார்; எனவே அவர் துன்பத்துள் துன்பமுறார். உலகைப்படைத்து உயிர்களை உவப்புறச் செய்பவனும் அவமுறச் செய்பவனும் இறைவனே ஆவான். இதனை அப்பரடிகள்,

"ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடாதாரே"

என இறைவன் நம்மை ஆட்டுவிப்பவனாகவும் நாம் அவன் திருவுளக்குறிப்பின் வண்ணம் உலகம் என்னும் நாடக மேடையில் ஆடுவோராகவும் குறிப்பிடுகின்றார்.

உலகந்தோன்றிய நாள் தொட்டு நன்றுமுண்டு; தீதுமுண்டு. பயிரினிடையே பசுங்களை நிற்றலே போலப் புண்ணியத்தினிடையே பாவமும் நிற்றலுண்டு. பொய்யே தீமை; தீமையே பாவம். இவை உண்மைக்கு மாறுபட்ட போலிகள்.

போலிகளைக் கண்டு ஏமாறுதல் உலகியல்பு, பெருங்கல்வி உடையாரும் போலிகளைக்கண்டு மெய் யென்று மிரள்வர். போலியை நீக்கி மெய்யை உணர ஆழ்ந்த நூலறிவும், திருவருட் சிந்தனைத்திறமும் வேண்டும்.

போலிகள் தீமைதருவனவே, அப்போலிகள் நாம் போலி என்பதை உணர்ந்து மெய்மை நண்ணினால் நன்மை அடைவார்; பொய்யர்கள் திருந்துவதற்குப் பல வாய்ப்புகளை இறைவன் வழங்குகின்றான். கத்தரிக்காயைச் சிவலிங்கம் எனப் பொய்யடியார் ஒருவர் மெய்படியாரிடையே ஏமாற்ற முனைந்தார். மெய்யடியார்களின் கருணைத்திறத்தால் கள்ள வேடம் பூண்ட பொய்யர் மெய்யடியாராயினர். ஏமாற்றுதற்காக எடுத்த பொய் வேடம் மெய் வேட

மாயிற்று. தினை விதைத்தவன் தினை அறுப்பான்—வினை விதைத்தவன் வினை அறுப்பான் என்பது பழமொழி. நல்லறஞ் செய்வோர் நல்லுலகடைதலும், அல்லறஞ் செய்வோர் அருநரகடைதலும் இயற்கை. இவ்வியற்கைக்கு மாறுபட்டவர்கள் நன்மை அடைவது எப்படி? ஆண்டவனுடைய அருளாட்சியின் சட்டம் விரிந்தது; கருணைமிக்கது. தாயைப்புணர்ந்து தாதையைக்கொன்ற மாபாதகனுக்கும் அருள் சுரந்த கொடை வள்ளல். மாபாதகன் செய்தவை அனைத்தும் தீயவையே. தீயவற்றின் பயனை நுகர்ந்தான். நல்லவற்றின் பயனே மேன்மை என உணர்ந்தான். அப்பொழுதே அவன் மெய்யடியாரிடையே நெருங்கிவிட்டான். அவன் செய்த மாபாதகம் மன்னிக்கப்பட்டது; மறக்கப்பட்டது. அவனை நமக்குத் திருவிளையாடற் புராணம் அறிமுகம் செய்து வைக்கிறது. ஒருகாரியத்தைச் செய்த பின்பு அதை ஏன் செய்தோம் என வருத்தப்பட்டு இரங்குவாயானால் மீண்டும் அக்காரியத்தைச் செய்யாதே என்ற கருத்துடைய

" எற்றென்று இரங்குவ செய்யற்க
மற்றன்ன செய்யாமை நன்று "

என்ற திருக்குறள் தீமையிலிருந்து திருந்துவதற்குத் திருப்பு முனைகாட்டும்.

தீமையே நன்மைக்கு ஆணிவேர்; அடிக்கற்கள். அவற்றின் பிடிப்பும் உரமுமே நன்மையை வாழ்விப்பன. இக்கருத்து சிறிது புரட்சிகரமாகத் தோன்றினும், சமய அநுபவ உறைப்புடையோர் இதனை ஒருபொருட்டாகவே மதியார். எல்லாம் பழைய கருத்துக்கள் தான். இதனை வாதவூரடிகள்,

" அன்றே யென்ற னாவியு முடலு
முடைமையு மெல்லாங்
குன்றே யனையாய் என்னை யாட்
கொண்ட போதே கொண்டிலையோ ?
இன்றோ ரிடையூ றெனக் குண்டோ
எண்டோள் முக்கண் எம்மானே
நன்றே செய்வாய் பிழை செய்வாய்
நானோ இதற்கு நாயகமே ? "

என்ற திருவாசகத்தால் எல்லாவற்றிற்கும் நாயகமாக்கும் நயமான செயலை— இறைவனின் அருட்டிறத்தை உன்னுந்தொறும் உன்னுந்தொறும் நெஞ்சு நெகிழும்.

பொய்கொண்டு மெய்யீட்டுவோரும் உண்டு. மெய் கொண்டு பொய்யீட்டுவாரும் உண்டு. இரண்டிற்கும் மூல ஊற்றாய்த் திகழ்வது அன்பு, அன்பு செய்

தோர் அல்லல் அடையவேண்டும். அல்லல் அடையாத அன்புடையோர் என்பு தோல் போர்த்த வெறும் உடம்பினராவர். அல்லல் அலை அலையாகத்தாக்கத் தாக்க அன்பு சூலுறும். முடிவில் அவ்வன்பு என்னுந்தாய் அருள் என்னுங் குழவியை ஈன்றெடுக்கும், தன்நலத்தில் இருந்து பொதுநலம் தோன்றி பேரின்ப நிலையை அடையச் செய்கிறது அன்பு.

தீமையே பற்றுக் கோடாய்க்கொண்ட அன்புடையோர்க்கு ஆண்டவன் தீமையேதரினும், அத்தீயவன்புடையோர் திருந்துவதற்குப் பலவாய்ப்புகளை ஆண்டவன் வழங்குகின்றான். அவ்வாய்ப்புகள் நன்மைக்குத் திருப்புமுனையாய் இருத்தலை மனிதராய்ப் பிறந்தோர் அறிந்தே தீருவர்.

நெருப்பு சுட்டபின்பு குழந்தை நெருப்பை நெருங்குவதில்லை. குழந்தை அதுவரையில் நெருப்பை நெருங்கவேண்டும் என்ற உணர்வு—அன்பு நிகழ்ந்து கொண்டிருந்தது. நெருங்கிச் சுட்டபின்பு அவ்வன்பைத் தவிர்த்து அவ்வன்பை வேறொன்றின் மேற் செலுத்துகிறது. அவ்வாறு படிப்படியாய் அன்பு கருவியாக நின்று பொய் மெய் உணர்த்தி மேனிலைக்கும் இட்டுச்செல்லும். எனவேதான் அப்பரடிகளும்

"எப்பரிசாயினும் இறைவனை ஏத்துமின்
அப்பரிசு ஈசன் அருள் பெறலாமே" என்றார்.

நன்மை தருவார் ஈசன்; அவரே தீமையும் தருவார். உயிர்கள் பிறருக்குச் செய்கின்ற தீமைகளும் தனக்குச் செய்துகொள்ளுகின்ற தீமைகளும் இறைவனுடைய நன்மையை எதிர்பார்த்துத்தான். ஆனால் உயிர்கள் ஆணவமல இருளால் அதனை உணர வாய்ப்பில்லை. உணர்ந்தவர்கட்கு நன்மைதரக் காத்து நிற்கின்றான்.

"சிந்தித் தெழுவார்க்கு நெல்லிக் கனியே"
என்ற சுந்தரர் திருவாக்கை நோக்குக.

நன்மையே மெய்; தீமையே பொய்; மெய் நிலையானது; பொய்நிலையற்றது. நிலையற்றதன் நிலையுணர்ந்தோரே நிலையானதை நினைப்பர். அப்பொழுது பொய்மை நீங்கும்; நன்மையை நண்ணுவர். நன்மையே சிவம். அதனைப் பெற்றுத் துய்த்தலே பேரின்பம் தீமை தருவாரிடம் இருந்து நன்மை பெற வழி காட்டுகின்றார் வாகீசப்பெம்மான்.

"மெய்ம்மையாம் உழவை ச்செய்து
விருப்பெனும் வித்தை வித்திப்
பொய்ம்மையாங் களையை வாங்கிப்
பொறையெனும் நீரைப் பாய்ச்சி

தம்மையுள் நோக்கிக் கண்டு
தகவெனும் வேலியிட்டுச்
செம்மையுள் நிற்ப ராகிற்
சிவகதி விளையு மன்றே"

என்ற திருப்பாடல் நன்மை பெருகருள் நெறியாம் சிவகதிக்கு வழிகாட்டும்.

எனவே இறைவன் உயிர்கள் திருந்தும் பொருட்டுத் தீமைகள் தருவான் அத்தீமை எனும் பிணிக்கு மருந்து தரும் வள்ளலாகவும் விளங்குவான். அதற்கு எடுத்துக்காட்டு பெரியபுராணமாகும். திருவருட் குறிப்புணர்த்த நோய்தந்தும், திருவருளை ஈய நோய் தணிக்கும் மருந்து ஈந்தும் உயிர்களை வாழ்வாங்கு வாழ்விக்க இறைவன் முயல்கின்றான்.

அவன் முயற்சிக்கும் பொழுது நாம் வாளாவிருத்தல் கூடாது. நாமும் நமது பங்கான முயற்சிக்கு ஆட்பட்டு, இறைவனிடம் இருந்து நன்மை பெறுவோம்; அல்லது தீமை பெறுவோமாக. இறைவன் இரண்டில் ஏதேனும் ஒன்றைத்தருவன். அவ்வொன்றே அவனது அருள் என நினைவும் தகுதி நமக்கு ஏற்பட்டு விட்டால் இம்மையில் நமக்கு நன்மை கிட்டாமலா போகும்?

"இடரினும் தளரினும் எனதுறு நோய்
தொடரினும் உனகழல் தொழு தெழுவேன்"

என்ற திருவாக்கே. இருவினையொப்பு மலபரிபாகத்தில் இருந்து நீங்கப் புணையாகும்.

அடியார்கள் நாம் நன்மை என நினைப்பவற்றைத் தீயவையாகவும் தீயவற்றை நன்மையாகவும் கொள்ளும் இயல்பினராவார். மெய்ப்பொருள் நாயனார் பாய் வேடங்கொண்ட முத்தநாதனைத் தன் உயிரைப் பறித்தபோதுங்கூட, அவனுக்கு யாதொரு தீங்கும் வருதல் கூடாது என்பதிலே கருத்தோடிருந்தார். தத்தனை அழைத்துப் பாதுகாப்புத் தருகிறார் முத்தநாதனுக்கு.

தீயவனுக்கும் நன்மை செய்கிறார் மெய்ப்பொருளார். இதுபோன்ற வரலாறுகள் இயற்கைக்கு மாறுபட்டு விளங்குபவை. மெய்ப்பொருளார் நன்மை பெருகு அருள் மலை; முத்தநாதன் தீமை பெருகு மருள்மலை. தீமைசெய்த முத்தநாதன் நன்மை பெறுகின்றான்; நன்மை செய்த மெய்ப்பொருளார் தீமை எனநாம் நினைக்கின்ற நிலையில் உயிரை இழக்கின்றார். தீயவற்றின் பயன் நன்மையில் முடிகிறது. நல்லவற்றின் பயன் தீமையில் முடிகிறது என உடன் கணக்கிடுவோம். மெய்ப்பொருள் போன்றபெரியார்கள் தீமையும் நன்மைக்கே எனக் கணக்கிடும் கருத்துடையவராவர். எனவே தான் வள்ளுவப் பெருமகனாரும்

"நன்றாற்றலுள்ளும் தவறுண்டு அவரவர்
பண்பறிந் தாற்றாக் கடை"

என்றார். நன்மை செய்தவர் தீமையடைந்தாலும் அத்தீமையும், ஆண்டவனது அருட்கொடை என உறுதி பெறுகின்றனர்.

கற்றூணைப் பூட்டிக் கடலிற் பாய்ச்சினர் நாவரசை; நெருங்கற்கரிய நீற்றறையிலிட்டனர். வாரணத்தின் காலிலிட்டு இடறச் செய்தனர். இதற் கெல்லாம் அஞ்சினரோ ஆளுடைய அரசு? இல்லை. எம்பிரான் மறக்கருணை என நினைந்தார். அறக்கருணை பெறும் வழியில்லை யெனினும் ஆண்டவனின் மறக்கருணைக்கேனும் பாத்திரமான தன்மையை எண்ணி வியக்கின்றார்.

நல்லவற்றிற்கும் அல்லவற்றிற்கும் நடுநாயகம் இறைவன். அவன் ஏதோ ஒன்றைத் தருகின்றான், அதை நாம் அன்போடு பெற்று அவனடி மறவாத சிந்தையரானோமேயாயின் நாம் அஞ்சுவதுயாது ஒன்றும் இல்லை; அஞ்சவருவது மில்லை. இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை.



கள்ளேறு கடுக்கைநறுஞ் சடையானே!
போற்றி! பெருங்கருணை! போற்றி!
வெள்ளேறு கொடியுயர்த்த விடையானே!
போற்றி! அருள்விகிர்தா! போற்றி!
புள்ளேறு கொடியுயர்த்த புனிதன் அயன்
தேறாத புனிதா! போற்றி!
வள்ளேறு சிறுதுழவி மதிநுதல்அங்
கயற்கண்ணி மணாள! போற்றி!

பாதமலர் இணைபோற்றி! பன்னிரண்டு
கையானைப் பயந்தாய்! போற்றி!
வேதமுடி கடந்தபர ஞானத்தில்
ஆனந்த விளைவே! போற்றி!
போதவடி வாய்நால்வர்க்(கு) அசைவிறந்து
நிறைந்தபரம் பொருளே! போற்றி!
மாதவள நீறணிந்த மன்னா! அங்
கயற்கண்ணி மணாள! போற்றி!

உ

# மதுரை ஸ்ரீ நன்மைதருவார் கோயில்

## திருப்புகழ்

கவி. ஆறுமுகனர், மதுரை.

பண்ணிசைகள் ஆர் கொங்கு வண்டெச்சில் பால்கனிகள்
தென்னைவிதை மாபொங்கல் வெந்திட்டபாகு சுவை
பண்ணுபல காரங்கொள் தொந்திக்க ணேசர்மகிழ்—இளையோனே

பன்னகவொர் காளிங்கன் அஞ்சப்ப ணமுடியில்
நண்ணுமிரு தாளுந்து நுண்சப்த தாளவியல்
பன்னுநட னேர்சங்க திண்சக்க ராயுதனின்—மருகோனே

விண்ணதிரு மா கொண்டல்—என்றிட்ட போர் முரசு
துன்னுபடை தேர்மிண்டு தம்பட்ட மோடுவரு
வெந்நிருத சாலம்ப லங்கெட்டு வீழநிரை—கழுகாட

விம்முகுர லோடும்பிணஞ் சுற்று பேய்கள்தசை
தின்னுகளி ஆடும்து ணங்கைக்கை கோடஅருள்
மின்னுகய லேர்கண்த—ருஞ்சத்தி வேல்விசிறு—திறலோனே

தண்ணிலவு நீள்சந்த—னம் சித்தர் மாபொதிகை
தென்மலையின் ஊர்தென்ற லும்சுட்டதாயர் உரை
தம்மைமதி யாள் உண்ப தும்துப்பு வாள்மருவு—மயல்தீரச்

சண்முகமும் ஈரைந்தி—ரண்டுச்ச வார்புயமும்
விண்மணி பொன் மார்பும்து—லங்கக் கலாபமிசை
சம்மதம தோதுங்க—டம்பத்த ணர மொடு—வருவாயே

நண்ணுபுக ழேமிஞ்சு—சந்தச்சொல் மாரி பொழி
அண்ணல்கிரி யார்என்ற—எந்தைக்கு மாயசன
னம்மரண நோயின்றி—இன்பத்து வாழ்வருளும்—[illegible]னியோனே

நன்மை செய லேகொண்ட—இன் சொற் குலாவிஉள
உண்மைநிலை மேல்நின்ற கந்தக்கு காமதுரை
நன்மைதரு வார்என்ற * நம்பிக்கை யாகிமலர்—பெருமாளே

---

" நம்பிக்கு—சிவபிரானுக்கு
ஐ ஆகி—ஆசான் ஆகி
மலர்—திருவாய் மலர்ந்தருளிய " எனவும் பொருள் கொள்ளலாம்.

உ

### மதுரை - ஸ்ரீ இம்மையிலும் நன்மைதருவார்

# கும்பாபிஷேக - இரதபந்தம்




*தோத்திரப்பா.*
நேரிசை வெண்பா.

சார்பார் சிவாசிவன ருட்கூடற் கோதரனுய்
ஊர்நடுமை யத்துபா சித்தபிரான்—சீர்தாதா
கும்பத்தா னம்மியங்கும் வாயிலாச்செம் மைச்சிலம்ப
இம்மையி னன்மைதரு வார்.

பொருள் கோள் (பதப்பிரிவு)

சார்பு ஆர் சிவாசிவன் அருட்கூடல் கோதரனுய்
ஊர்நடுமையத்து உபாசித்த பிரான். இம்மையில்
நன்மை தருவார், கும்பத்தானம் இயங்கும்
வாயிலாய், செம்மை சிலம்ப சீர் தா தா.

**பொருள்.**

எல்லா உயிரிடத்தும் சார்ந்திருக்கின்ற (மதுரைமா நகரில் எழுந்தருளியிருக்கும்) உமையோடு கூடிய சிவபிரான் அருள்கொண்டு, மதுரையில் (பாண்டிய) மன்னனுகி, (தடாதகைப் பிராட்டியாரை மணந்து) நடுவூரில் (உலகிற்கு வழிகாட்டியாக ஆலயம் அமைத்து) அர்ச்சித்த, இம்மையிலும் நன்மை தருவாராகிய நாயகனே, (இன்று) கும்பாபிஷேகம் நடந்தேறும் மூலமாக (உலகத்தார்க்கு) பெருமை முழங்க, சகல சிறப்புக்களையும் தந்தருள்வீராக.

ஆக்கியோன்,

**கவி M. பிரம்மாநந்தர்,**

சிவகெங்கை தேவஸ்தானம்,

***-*****************************-***

# மணிவாசகர்

**M. R. யாழ்கித சுந்தரம் பிள்ளை,**

தலைஓதுவார், திருவாதவூர்.

***-*****************************-***

செந்தமிழ்த் திருநாட்டில் தெய்வபக்தியின் முதிர்ச்சியால் பெரும் பேறு பெற்ற சைவத்திருப் பெரியாருள் மாணிக்கவாசக சுவாமிகள் மிகச்சிறந்தவர் என்பது எவரும் உணர்ந்ததாம். அவர் சொக்கன் அருள் நன்மை பெறு தொன்மை திகழ் நன்னாடாகிய பாண்டிய நாட்டில் திருவாதவூர் என்னும் திருத் தலத்திலே அவதாரம் செய்தருளியவர். பாண்டிய நாட்டின் தலை நகரமாக விளங்கிய மதுரையம்பதியிலிருந்து பதினைந்து கல் தொலைவில் அமைந் துள்ளது திருவாதவூர்.

அவ்வூர் ஆதிசைவ அந்தணர் குலத்திலே தோன்றி கல்வி அறிவு ஒழுக்கங் களால் சிறந்த பெரியார் ஒருவருக்கு நம் மணிவாசகர், அன்பர் இதய தாமரைக ளெல்லாம் செம்மையாய் மலர ஞான தினகரரென, மகனாக அவதாரம் செய்தார். இவர் பிள்ளைத்திருநாமம் திருவாதவூரர் என்பது. தக்க நல்லாசிரியர் பால் கல்வி கற்று பல்வேறு கலைகளிலும் சிறந்து விளங்கினார்.

இவரின் அறிவாற்றல்களைக் கேட்ட பாண்டிய மன்னன் இவரைத் தன் அமைச்சராக்கித் தென்னவன் பிரமராயன் என்ற சிறந்ததோர் பட்டமும் வழங் கிப் போற்றினான். பின்னர் சில நாள் சென்றதும் அரசனின் ஆணையின் வண்ணம் மணிவர்சகர் பெரும் பொருளைக் கருவூலத்திலிருந்து எடுத்துக் கொண்டு குதிரைகள் வாங்குவதற்காகச் சோழ நாட்டை நோக்கித்தம் பரிவாரங் களுடன் பயணமானார்.

அமைச்சுத் தொழிலைத் திறம்பட நடத்திய போதிலும் மணிவாசகர் இவ்வுலகப்பற்றை விட்டு திருவைந்தெழுத்தின் குறிக்கோளாகிய சிவமெனும் செம்பொருளைத் தமக்குத் தெளிவிக்கும் ஞானகுருவின் திருவடிகளைக் கூடல் வேண்டு மென்று கருதினார். வேண்டத்தக்கதை அறிந்து வேண்டமுழுதும் அளிப்போனாகிய சிவபெருமான் அவர் கருத்தை முற்றுவிக்கக் கருதித்திருப் பெருந்துறை என்னும் தலத்தில் ஞானாசாரிய வடிவம் கொண்டு அடியார்கள் பலர் சூழ குருந்த மர நிழலில் அமர்ந்திருந்தார்.

அவ்வழியே சென்ற மணிவாசகர் தாய்ப்பசுவைக் கண்ட கன்று போல் கசிந்துருகி அவர் திருவடிகளில் வீழ்ந்து தமக்கு அருளுபதேசம் நல்குமாறு வேண்டினர். இறைவனும் அவருடைய பக்குவ நிலைகண்டு திருவைந்தெழுத்தை உபதேசித்தருளினர்.

இதனை மணிவாசகர் தம் திருவாசகத்துள் "உரு நாமறியவோரந்தணனு யாண்டுகொண்டான்" என்று கூறுவதன் மூலம் அறியலாகும். இவ்வாறு உபதேசம் பெற்ற மணிவாசகர் குருவின் ஆணைப்படித் தாம் குதிரை வாங்கக் கொண்டு சென்ற பொருள் அனைத்தையும் சிவாலயத் திருப்பணிக்கும், அடியார்க்கும், அருந்தவர்க்கும், வறியவர்க்கும் வழங்கி அவ்விடமே தங்கியிருந்தார். இதனை அறிந்த பாண்டியன் அரிமர்த்தனன் சினம்கொண்டு மணிவாசகரை அழைத்துவரும்படி ஆளை அனுப்பினன். மணிவாசகர் தம் ஞானசிரியர் பால் இதனைத் தெரிவிக்க ஆவணி மூலத்தன்று குதிரைகள் வருமெனப் பாண்டியனிடம் தெரிவித்துச் சமாதானம் செய்க என இறைவன் அருளினர். அவ்வாறே மணிவாசகரும் மதுரையை அடைந்து பாண்டியனிடம் தெரிவிக்கப் பாண்டியனும் சினம் தவிர்ந்து அவரைப்போற்றி இருந்தான். சிலநாள் சென்றபின் குதிரைகள் வருவதற்குரிய யாதொரு நிகழ்ச்சியும் நடைபெறுமையைக் கண்டு மணிவாசகரைச் சிறையில் வைக்குமாறு மன்னன் கட்டளையிட்டான். சிறையில் வருந்திய மணிவாசகரின் நிலை கண்டு சிவபெருமான் தம் பூதகணங்களை எல்லாம் குதிரைச் சேவகர்களாக மாறும்படி செய்து காட்டிலுள்ள நரிகளையெல்லாம் குதிரைகளாக்கித் தாமும் குதிரைத் தலைவரெனப் பாரின்பம் கொளப் பரிமேல் மதுரையில் வந்தருளினர்.

குதிரைகள் வந்தமையை அறிந்த பாண்டியன் மணிவாசகரை விடுதலை செய்து குதிரைத் தலைவராகிய இறைவன் பால் குதிரைகளைப் பெற்று அவற்றைக் குதிரைப் பந்தியில் கட்டச்செய்தான். அவ்வாறு செய்த அன்றிரவே இறைவன் அருளால் குதிரைகளெல்லாம் மீண்டும் நரிகளாகி மதுரையில் பெருங் குழப்பத்தை விளைவித்தன. இதனைக்கண்ட மன்னன் பெரும் சினங்கொண்டு மணிவாசகரைச் சுடுமணலில் நிறுத்திக்கொடுமைப்படுத்தினன். அடியவரின் வருத்தம் கண்ட இறைவன் வைகையாற்றில் வெள்ளம் வருமாறு பணித்தார். அவ் வெள்ளம் மதுரையினை அழிப்பதுபோல் மிக்க வேகமாக வந்து கரைகளைத் தகர்த்தது. இதனை அறிந்த மன்னன் வீட்டுக்கொரு ஆள் கரையை அடைக்க வேண்டுமென ஆணையிட்டான். அப்பொழுது அந்நகரில் பிட்டு வாணிபம் நடத்திய செம்மனச் செல்வியாகிய வந்தி என்பாளுக்குக் கூலியாள் கிடைக்கவில்லை. அவள் இறைவனிடம் முறையிட அவளின் வேண்டுகோளை நிறைவேற்ற இறைவன் மண் சுமக்கும் கூலியாளாக வந்தார்.

வந்தி கொடுத்த பிட்டை உண்டு வேலை செய்யாது ஆற்றங்கரையில் உறங்கிய இறைவனாகிய கூலியாளைக்கண்ட மன்னன் சினம் கொண்டு தன் கோலால் அடிக்க இறைவன் எழுந்து ஒரு கூடைமண்ணைக் கரையிலிட்டு மறைந்தருளினர். இறைவன் மேல் பட்ட அடி எல்லா உயிர்களின் மேலும் பட்டது, வைகை ஆற்றின் வெள்ளப் பெருக்கும் குறைந்தது. இதனைக்கண்ட மன்னன் இறைவனின் திருவிளையாடலை எண்ணி மணிவாசகரை விடுதலை செய்து அவர் கால்களில் வீழ்ந்து வணங்கினன்,

மணிவாசகரும் அரசனைப் போற்றித் தம் அமைச்சுத் தொழிலை வேண்டாமென விடுத்து இறைவன் தமக்கு அருள்புரிந்த திருப்பெருந்துறைக்குச் சென்று இறைவனாகிய ஞானசிரியரைக் கண்டு வழிபட்டார். அவருடைய திருவருத்திறம் கருதி "நமச்சிவாய வாழ்க" என வாழ்த்தி மணிவாசகமாகிய திருவாசகம் சொல்லத் தொடங்கினர். அற்புதமறியேன் என்று அற்புதப் பத்தும் அதிசயக் கண்டோமென்று அதிசயப்பத்தும், குழைத்தபத்தும், சென்னிப்பத்தும், ஆசைப்பத்தும், வாழாப்பத்தும், அடைக்கலப்பத்தும், செத்திலாப்பத்தும், புணர்ச்சிப்பத்தும், அருள்பத்தும் பாடினர்,

பின்னர் ஞானமிக்குடைய திருவார்த்தை, எண்ணப்பதிகம் திருப்பள்ளியெழுச்சி, திருவேசறவு, ஆனந்தமாலை, உயிருண்ணிப்பத்து, பிரார்த்தனைப்பத்து, திருப்பாண்டிவிருத்தம் முதலியவற்றையும் அருளிச் செய்தார். பின்னர் இறைவனின் ஆணைப்படி திருவுத்தரகோசமங்கை சென்று நீத்தல் விண்ணப்பமும் ஓதி வழிபட்டார். சோழநாடு சென்று திருவிடைமருதூர், திருவாரூர், முதலிய தலங்களை வழிபட்டு சீர்காழியை அடைந்தார். தில்லைநகர் திசைநோக்கி வழிபட்டு விருத்தாசலம் என்னும் முதுகுன்றத்தையும், திருவெண்ணைநல்லூரையும் வழிபட்டுத் திருவண்ணமலை அடைந்தார். அங்கே திருவெம்பாவை, திருவம்மானை முதலியவை பாடிக் காஞ்சிபுரம், திருக்கழுக்குன்றம் சென்று வழிபட்டுத் தில்லையை அடைந்தார். அங்கே ஞானமா நடராஜப்பெருமானை வழிபட்டுக் குலாப்பத்து, கோயில் திருப்பதிகம்,கோயில் மூத்ததிருப்பதிகம்கீர்த்தித்திருவகவல்,திருவண்டப்பகுதி, போற்றித்திருவகவல், திருத்தெள்ளேணம் முதலிய திருவாசகங்களைப்பாடி அங்கேயே வாழ்ந்து வருவாராயினர்.

அப்போது புத்தரோடு வாது செய்து அவர்களை ஊமையாகும் வண்ணம் செய்தார். அதனைக்கண்ட இலங்கை மன்னன் தன்புதல்வியின் ஊமைத்தன்மையை நீக்குமாறுவேண்ட மணிவாசகரும் அவள்மீது அருட்பார்வை செலுத்த ஊமை நீங்கி அவள் பேசலானள். இவ்வாறு பல அருட்செயல்கள் நிகழ்த்தி மணிவாசகர் வாழ்ந்து வருகின்ற நாளில் இறைவன் அடியவர் வேடம்கொண்டு மணிவாசகரை

அனுகி திருவாசகம் முழுவதையும் கேட்டு ஓலையில் எழுதிக்கொண்டார். பின்னர் திருக்கோவையார் எனனும் திருச்சிற்றம்பலக்கோவையாரையும் பாடச் செய்து எழுதிக்கொண்டு சென்று அச்சுவடியில் எழுதியது அழகிய சிற்றம்பலமுடையார் எனக்கையெழுத்தும் செய்து அதனைப் பொன்னம்பலத்தில் வைத்தருளினர்.

அதனைக்கண்ட தில்லை வாழந்தனர்கள் பெருமகிழ்வெய்தி மணிவாசகப் பெருமானைப் போற்றி அவர்பாடிய திருவாசகத்திற்குப் பொருள் வினவ மணிவாசகர் ஞானமன்றமாகிய பொன்னம்பலத்தை அடைந்து இறைவனே பொருளெனக் காட்டிச் சோதியுள் சென்று சிவமாம் பெருவாழ்வை அணைந்தார்.

இத்தகைய ஞானப்பெரியாரின் அருள் வாக்குகளாகிய திருவாசகம் ஓதுவோரின் ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கும் தன்மையன. ஓதுவோரை நன்னெறிக்கு உயர்த்துவன. ஆதலின் திருவாசகம் ஓதி இறைவனடிக்கு காதல் செய்து அவனருள் பெறுவோமாக !



நாதவோ ! நாத முடி(வு) இறந்த நாடகஞ்செய்
பாதவோ ! பாதகனு மென்னைப் பணிகொண்ட
வேதவோ ! வேத முடிவின் விளைந்ததனிப்
போதவோ ! போத நெறிகடந்த பூரணவோ !

ஐயவோ ! என்னுடைய அன்பவோ ! அன்பர்க்கு
மெய்யவோ ! மெய்யில் வினையேன் தலைவைத்த
கையவோ ! செய்யகழற் காலவோ ! காலனைக்காய்
செய்யவோ ! வேதப் பரியேறுஞ் சேவகவோ !

அத்தவோ ! கல்லாக் கடையேனை ஆட்கொண்ட
பித்தவோ ! பொய்யுலகை மெய்பாகப் பேதிக்குஞ்
சித்தவோ ! சித்தந் தெளிவித்(து) எனைத்தந்த
முத்தவோ ! மோன மயமான மூர்த்தியவோ !

# பிறவி வேண்டுவதே

வரலாற்றுச் செல்வர் R. பஞ்சநதம் பிள்ளை
தமிழ்ப்புலவர், திருச்சி.



பிறவிகளில் மனிதப்பிறவி மிகவும் அரிது. 'அரிதரிது மானிடராய்ப் பிறத்தலரிது' என்பர். இப்பிறவியில் மெய் வாய் கண் மூக்கு செவி என்னும் ஐம்புல நுகர்ச்சியுடன் நன்மை தீமைகளைப் பகுத்தறியும் அறிவைப்பெற்றிருப்பது முக்கியமாகும். அறிவை இன்னதென்று விளக்கும்போது மனதைச் சென்ற விடமெல்லாம் செல்ல விடாமல் தீமையானவற்றிலிருந்து நீக்கிக்காத்து நன்மை யானவற்றில் செல்ல விடுவதே அறிவாகும் என்று திருவள்ளுவர் கூறுகிறார்.

"சென்ற இடத்தால் செலவிடா தீதொரீஇ
நன்றின் பால் உய்ப்பதறிவு"—(திருக்குறள்)

இத்தகைய அறிவைப் பெற்ற மனிதப்பிறவியைச் சிலர் வேண்டாம் என்கிறார்கள். மனிதர்க்கு நூறுவயதென்றிருந்தாலும் (தற்போது அவ்வெல்லை இல்லை) பாதி தூக்கத்தில் போய்விடும். மீதி நாட்களில் பிணி முதலியவைகளால் கழியும். இக்காரணங்களால் பிறவி வேண்டேன் என்று ஓர் ஆழ்வார் வேண்டுகிறார்.

"வேதநூற் பிராயநூறு மனிதர் தாம் புகுவரேனும்
பாதியு முறங்கிப் போகும் நின்றதிற் பதினையாண்டு
X X பாலகனதாகும் பிணிபசி மூப்புத் துன்பம்
ஆதலாற் பிறவி வேண்டேன் அரங்கமா நகருளானே"

(தொண்டரடிப்பொடியார்)

இவ்வாறே வேறு சிலரும் பிறவிவேண்டாம், முத்தியும் வேண்டாம் என்று கேட்டிருக்கிறார்கள்.

ஆனால் சைவ சமயத் தலைவர் நால்வருள் திருநாவுக்கரசராகிய அப்ப ருடை வாழ்க்கையில் ஒரு மாற்றம் காண்கிறோம். ஓரிடத்தில் பிறவிவேண்டும் எப்போது வேண்டும் என்று காட்டுகிறார். திருநாவுக்கரசர் திருவாமூரிற்பிறந்த வர். வாழ்க்கையில் பல துன்பங்களை அனுபவித்தவர். வேதநெறி சைவநெறி விளக்கியவர். நஞ்சை அமுதாகக்கொண்டவர். நமச்சிவாய மந்திரத்தைத் துணையாகக்கொண்டு கருங்கல்லையே மிதவையாகக்கொண்டு கரையேறியதல்லா மல் பிறவிக் கடற்கரைகளையும் வென்றவர். இவர் பல தலங்களையும் தரிசித்துப் பதிகம் பாடிக்கொண்டு யாத்திரை செய்யும்போது கோயில் என்னும் சிறப்புப் பெயர்பெற்ற சிதம்பரத்துக்கு வந்தார். சமயத்துறையில் கோயில் என்றால்

சைவ சமயத்தில் சிதம்பரத்தையும், வைணவ சமயத்தில் திருவரங்கத்தையும் குறிக்கும். சிதம்பரத்தில் ஆடல் வல்லாராகிய நடராஜப் பெருமான் நடனம் ஆடுகிறார். பக்கத்தில் சிவகாமி, பதஞ்சலி, வியாக்கிரபாதர் ஆகியோர் தரிசிக்கிறார்கள். நடராஜர் திருவுருவத்தில் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்து தொழில்களும் அமைந்துள்ளன. உடுக்கையால் தோற்றமும், அபய கரத்தால் காத்தலும், அனல்கையால் அழித்தலும், ஊன்றிய திருவடியால் மறைத்தலும், தூக்கிய திருவடியால் (குஞ்சிதபாதம்) அருளலும் குறிக்கப்படுகின்றன.

> 'அடுத்த இன்னுயிர் கட்கு அளவில் பேரின்பம்
> கொடுப்பது நின்பெருங் குஞ்சிதபாதமே'—(குமரகுருபரர்)

திருநாவுக்கரசர் சிதம்பரத்தில் ஸ்ரீநடராஜப்பெருமானைத் தரிசித்தார். கண்பெற்ற பயனைப் பெற்றார். தன்னை மறந்தார். தன் நாமம் கெட்டார். தம்மனதைப்பறிகொடுத்தார். பெருமானுடைய வளைந்த புருவம், கொவ்வைக் கனி போன்ற சிவந்தவாயில் குமின் சிரிப்பு, குளிர்ந்தசடை, பவளம் போன்ற மேனியிற் பால்போன்ற வெண்ணீறு, என்று வந்தாய் என்று கேட்பதுபோன்றுள்ள அபயகரம், அடியார்களுக்கு இனிமை தருகின்ற எடுத்த திருவடி ஆகிய தலை முதல் திருவடி வரையிலுள்ள தோற்றக்கண்டு பேரானந்தம் அடைந்தார். இவ்வடிவத்தைக்கண்டு தரிசிப்பதற்கு மனிதப்பிறவி அவசியம் வேண்டுவதே என்று உணர்ந்தார். இவ்வுணர்ச்சி ஓர் அற்புதப்பாடலாக வெளிவந்தது.

> "குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயிற் குமிண் சிரிப்பும்
> பனித்த சடையும் பவளம்போல் மேனியிற் பால்வெண்ணீறும்
> இனித்தமுடைய எடுத்த பொற்பாதமும் காணப்பெற்றால்
> மனித்தப்பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே"
>
> (திருநாவுக்கரசர்)

ஆகவே இறைவனைக் கண்ணாரக்கண்டு தரிசிப்பதற்கும், அவனுக்குத் தொண்டு செய்வதற்கும் மனிதப்பிறவி வேண்டும். இபலபாகவே மனிதப் பிறவியைப்பெற்ற நாம் முன்னோர் சென்ற வழியிற் சென்று அவனருளைப் பெறுவோமாக. தற்போது மதுரையில் இம்மையிலும் நன்மைதருவார் கோயிலுக்குக் கும்பாபிஷேகம் நடைபெறுகின்றது. மனிதப்பிறவியைப் பெற்ற நாம் கண்பெற்ற பயனாகக் கும்பாபிஷேகக் காட்சிகளைக்கண்டு தரிசித்து இம்மையிலும் நன்மை பெற்று, மறுமையிலும் இன்பம் பெறுவோமாக,

> "இம்மையே தரும் சோறுங் கூறையும் ஏத்தலாம் இடர் கெடலுமாம்
> அம்மையே சிவலோகம் ஆள்வதற்கு யாதும் ஐயுறவில்லையே" (சுந்தரர்)

# மதுரை நகர் காக்கும் அருட்சக்திகள்

நா. பத்மநாபன்

"அருளது சக்தியாகும் அரன்தனக்கு, அருளையின்றித் தெருள் சிவமில்லை, அந்தச் சிவமின்றிச் சக்தியில்லை" என்பது ஆன்றோர்களின் அருள்வாக்கு. யாவற்றையும் கடந்த பரம்பொருள், உலகில் உயிர்கள் துன்பம் நீங்கி இன்பம் பெற்று உய்வதற்காகவே தனது திருவருளைச் சக்திவடிவமாக்கியதாகக் கூறப் படுகிறது. இவ்வுண்மையினையே,

"தாய்தன்னை அறியாத கன்றில்லை
தன் கன்றை
ஆயும் அறியும், உலகின் தாயாகி
ஐய! நீஅறிதி எப்பொருளும்" என்ற கவிச்சக்ரவர்த்தி

கம்பரின் பாடலும் அறிவுறுத்துகின்றது.

இந்திய நாட்டில் சக்தி வழிபாடு மிகவும் தொன்மைபெற்றது என்பதைப் பிறநாட்டு அறிஞர்களாகிய ஸர் ஜான் மார்ஸல் என்பவரும் மோனியர் வில்லியம்ஸ் என்பவரும் தங்களது நூற்களில் சிறிதும் சந்தேகத்திற்கு இடமின்றித் தெளிவாக்கியிருக்கின்றனர். ஸிந்து சமவெளிப் பிரதேசம் தான் பண்டைய நாகரிகத்தின் உயர்வை விளக்குவதாகச் சொல்லப்படுகிறது. இங்குள்ள மோஹன் ஜொதோரோ, ஹரப்பா என்னுமிடங்களின் புதைபொருள் ஆராய்ச்சியின்மூலம் இந்நாகரிகம் கிறிஸ்து பிறப்பதற்கு முன் சுமார் 3500 ஆண்டுகளுக்கு முற்பட்டது என்று அறியப்படுகிறது. அக்காலத்திலேயே சிவலிங்கவழிபாடும் சக்தி வழிபாடும் நடைபெற்று வந்ததை அறியும்பொழுது நம்முன்னோர்களின் பக்திப்பெருக்கை வார்த்தைகளால் விவரிக்க இயலாது.

சக்தி வழிபாட்டினால் அடையும் நன்மைகளை அபிராமி அந்தாதி,

"தனம் தரும், கல்வி தரும், ஒருநாளும் தளர்வு அறியா
மனம் தரும் தெய்வ வடிவம் தரும் நெஞ்சில் வஞ்சமில்லா
இனம் தரும் நல்லன எல்லாம் தரும் அன்பர் என்பவர்க்கே
கனம் தரும் பூங்குழலாள் அபிராமி கடைக்கண்களே"

என்று கூறுகிறது சக்திதேவியைக் காத்தல் என்னும் தொழிலின் அதிதேவதையாகிய விஷ்ணுமூர்த்தியின் வடிவம் என்றும் கூறுவர். நோயற்ற வாழ்வையும், குறைவற்ற செல்வத்தையும் கல்வி கேள்விகளில் சிறந்த திறமையையும், மற்றும் பல நன்மைகளையும் தந்தருள வேண்டியே சக்திதேவியின் விழாவாகிய நவராத்திரி

தொன்றுதொட்டே நாடு முழுவதிலும் கோலாகலமாகக் கொண்டாடப்படுகிறது. நவராத்திரி சமயத்தில் சக்திதேவியை வழிபட்டே, ஸ்ரீராமபிரான் இராவணனைப் போரில் வென்றதாகக் கருதப்படுகிறது.

கடவுளின் துணைவியாகக் கருதி நாம் வழிபடும் சக்தி தேவி அன்புடன் சகல உயிர்களையும் காக்கவேண்டி என்றும் கன்னியாகி அருள்புரிகின்றாள் என்பதைச் சிவஞான சித்தியார்,

"பவன் பிரம்ம சாரியாகும்
பால்மொழி கன்னியாகும்" என்று கூறுகிறார். தாயுமான அடிகளாரும்,

"ஆரணி சடைக்கடவுள் ஆரணி எனப்புகழ
அகிலாண்ட கோடியீன்ற
அன்னையே பின்னையும் கன்னியென மறைபேசும்
ஆனந்த ரூப மயிலே" என்றும் பாடியுள்ளார். பிரமசாரியாகிய சிவபெருமானும் கன்னியாகிய சக்தி தேவியும் திருமணம் செய்துகொண்டு சிவசக்தியாகிய திருவிளையாடலை நாம் கொண்டாடும் வைபவம் தன்னகத்தே எத்தகைய உண்மையைக் கொண்டுள்ளது என்பதைத் திரிசிரபுரம் மகாவித்வான் ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களின் கீழ்க்கண்ட பாடல் மூலம் அறியலாம்.

"நீயெனப் பெருமான் விரும்பியோர் தினத்து
நிகழ் தரப் பொலிவதும் புவிக்குத்
தாயெனப்படு நீ யவ னெனப் பொலியுந்
தன்மையும் வேறெலே மென்று
சேயெனப்படு பல்லுயிர்க் கெலாமுண்மை
தெரிப்பது போலுமீ தருளே"

நம் நாட்டில் சக்தி வழிபாட்டிற்குரிய தலங்கள் பல காணப்பட்டபோதிலும், பாண்டிய நாட்டின் பழம் பெரும் பதியாகிய மதுரைமாநகரம் தனக்கென ஒரு தனிப்பெருமையுடையது. அன்னை சக்தி, பாண்டியர் தம் குமரியாய் அவதரித்து, முடி சூட்டி ஆட்சிபுரிந்த தலமும் இந்நகர்தான். இறைவன் சோமசுந்தரேஸ்வரபாண்டியராய், பாண்டிய குமாரியான மீனாட்சியம்மனைத் திருமணம் புரிந்து பாண்டிய மன்னர்களின் வரலாற்றைச் சிறப்படையச் செய்ததும் இப்பதியில்தான். முந்திய மதுரை காலவெள்ளத்தால் அழிந்துபோகவே, இன்றைய மதுரையை அதே இடத்தில் இறைவன் ஆணைப்படி குலசேகர பாண்டியன் அமைத்ததாகவும், அப்பொழுது சிவபெருமான் கரத்தில் ஆபரண

மாக விளங்கிய நாகம் ஒன்று தன் உடலை வளைத்து, வாலைவாயில் கவ்வி எல்லையைக் காட்டியதாகவும் சொல்லப்படுகிறது. நாகத்தின் விஷத்தால் பாதிக்கப்பட்ட இந்நகரைச் சிவபெருமான் தனது சடையிலுள்ள அமிர்தத்தை தெளித்து புனிதமாக்கியதால் இத்தலம் மதுரை அல்லது இனிமை பொருந்திய நகரம் எனப் பெயர்பெற்றதாகப் புராண வரலாறுகள் கூறுகின்றன. இதனையே பழைய திருவிளையாடலும்,

"திருவமர் அருள்சேர் சொக்கன் தேவர்கள் தேவன் வெய்ய
அரவுமிழ் ஆலவாற்றை மதுராமாக்குதலால் ஆங்கு
வார்புகழ் பதிக்கு நாமம் மதுரை மாநகரி யென்றே
பரிவுற அன்று முன்னுப்பரந்த துபாரின் மீது" என்று விவரிக்கின்றது.

சங்கம்வைத்துத் தமிழ் வளர்த்த புகழை மட்டுமின்றி, இறைவன் மானிடராய் வந்து திருவிளையாடல்கள் புரிந்து பற்பல நீதிகளை உலகுக்கு எடுத்துக் காட்டிய பெருமையையும் உடையது மதுரை. எத்தனையோ சாம்ராஜ்யங்கள் தோன்றின. மறைந்தன. அந்நியர்கள் படை எடுப்பினல் நகர்கள் பல அழிந்தன. அல்லலுற்றன. ஆனல் அன்று முதல் இன்றுவரை தொடர்ந்த சரித்திரத்தையும் மங்காத புகழையும் உடைய நகரம் ஒன்று இந்தியாவில் இருக்கின்றது என்றுல் நிச்சயம் அது மதுரைமாநகரமேயாகும். மதுரையின் மங்காத புகழுக்கும் ஒருபமைக்கும் காரணம் இந்நகரைக் காத்து நிற்கும் இருபெரும் அருட் சக்திகளாகிய மீனுட்சி அம்மனும் மத்தியபுரி அம்மனும் ஆவர்,

கலையழகும் சிற்பத்திறனும் வாய்ந்த மீனுட்சி அம்மன் ஆலயத்தையும் மீனுட்சி அம்மனின் எழில் நிறைந்த தோற்றத்தையும் அறியாதவர்யாரும் இலர். மீனுட்சி அம்மன் பெருமையினை மீனுட்சியம்மை இரட்டை மணிமாலை,

"கார்பூத்த கண்டத்தெங் கண்ணுதலார்க்கிரேமு
பார்பூத்த பச்சைப் பசுங்கொம்பே—சீர்கொள்
கடம்பவனத் தாயே நின் கண்ணருள் பெற்ருரே
இடம்பவனத் தாயேயிரார்" என்று புகழ்கின்றது.

மத்தியபுரி அம்மனின் ஆலயம் இம்மையில் நன்மை தருவார் கோயிலில் அமைந்துள்ளது. தேவி மிகவும் வரப்பிரசாதியாகக் கருதப்படுகிருள். இவ்வன்னையின் பரவசமிக்க தரிசனம் நம்மைத் தாயுமான அடிகளாரின் கீழ்க்கண்ட பாடலை நினைவுறச்செய்து, எல்லையற்ற இன்பத்தையும் மகிழ்ச்சியையும் அளிக்கிறது.

" பட்டவர்த்தனர் பராவு சக்ரதர
பாக்யமான சுப யோகமும்
பார காவிய கவித்வ நான்மறை
பராயணஞ் செய் மதியூகமும்
அட்டசித்தி நலன் பருக்கருள
விருது கட்டிய பொன் அன்னமே"

இம்மையில் நன்மை தருவார் கோயில் மீனுட்சி அம்மன் ஆலயத்தைப் போன்ற பிரமாண்டமான அமைப்பை உடையதாய் இல்லாவிடினும், தனக்கென சில சிறப்புகளைக்கொண்டு விளங்குகிறது. இறைவன் சோமசுந்தரபாண்டிய ராய் வந்து மீனுட்சியம்மனைத் திருமணம் செய்து பாண்டிய நாட்டின் அரசினை யேற்றவுடன் சிவபூஜை செய்து, தெய்வ வணக்கத்தின் பெருமையை உலகுக்கு எடுத்துக்காட்டிய பெருமையை இக்கோயில் உடையது. இவ்வாலயத்தின் கர்ப்பக்கிரகத்தில் உள்ள மூர்த்திகள் இவ்வரலாற்றை விளக்குகின்றன இறை வன் தன்னைத்தானே பூஜைபுரியும் அதிசயத்திருவுருவினை வேறு எங்குமேகாண்ப தரிது. சுவாமி ஆலயத்தின் பிரகாரத்திலுள்ள கல்லினுல் ஆன நடராஜர் திரு வுருவமும், உற்சவமூர்த்தியான நடராஜர் படிவமும், மாடத்தில் அமைந்துள்ள பிரம்மா, துர்க்கை அம்மன், தக்ஷிணுமூர்த்தி, சரஸ்வதி முதலிய தெய்வங்களின் சிலாவடிவங்களும் சிறந்த வேலைப்பாடுகள் உடையன. இவ்வாலயத்தில் கணபதி சுப்பிரமணியர், பைரவர் முதலிய தெய்வங்களுக்குத் தனிக்கோயில்கள் உள்ளன. சுருங்கக்கூறினுல் இவ்வாலயம் சைவம் (சிவன்), சாக்தம் (சக்தி) கணுபத்யம் (கணபதி), கௌமாரம் (சுப்பிரமணியர்) பைரவம் (பைரவர்) ஆகிய இந்துமதத் தின் ஐம்பெரும் பிரிவுகளையும் ஒன்றுக இணைத்து சமய சமரசத்தை வளர்க் கிறது சிவகெங்கை தேவஸ்தானத்தாரால் திறம்பட நிர்வகிக்கப்படும் இக் கோயில், மதுரை நகரில் மேலமாசி வீதியில் கூடலழகப்பெருமாள் கோயிலுக்குச் சமீபத்தில் அமைந்திருக்கிறது.

மதுரைக்கு வரும் ஆஸ்திகப்பெருமக்கள் அனைவரும் அவசியம் வந்து வழிபட்டு இன்பங்கள் பலபெறவேண்டிய முக்கியமான ஆலயங்களில் இம்மையில் நன்மை தருவார் கோயிலும் ஒன்றுகும். ஆலயத்தின் பெயருக்கேற்பவே, வழி படுவோருக்கு இம்மையிலேயே நன்மைகிடைக்கும் என்பது இறைவனின் அருள் வாக்கு என்பது மட்டுமின்றி நடைமுறையில் பக்தர்கள் பலர் கண்டுவரும் உண்மையும் ஆகும்.

# கடவுள்வாழ்த்து

---

### சொக்கநாதர்

பூவில் நாயகன் பூமகள் நாயகன்
காவின் நாயகன் ஆதிக் கடவுளர்க்(கு)
ஆவி நாயகன் அங்கயற் கண்ணிமா
தேவி நாயகன் சேவடி ஏத்துவாம்.

### அங்கயற்கண்ணம்மை

பங்கயற்கண் ணரியபரம் பரனுருவே
தனக்குரிய படிவ மாகி
இங்கயற்கண் அகனுலகம் எண்ணிறந்த
சராசரங்கள் ஈன்றும் தாழாக்
கொங்கயற்கண் மலர்க்கூந்தற் குமரிபாண்
டியன்மகள்போற் கோலங் கொண்ட
அங்கயற்கண் அம்மை இரு பாதப்போ(து)
எப்போதும் அகத்துள் வைப்பாம்.

### தடாதகைப் பிராட்டியார்

செழியர்பிரான் திருமகளாய்க் கலைபயின்று
முடிபுனைந்து செங்கோல் ஓச்சி
முழுதுலகுஞ் சயங்கொண்டு திறைகொண்டு
நந்திகண முனைப்போர் சாய்த்துக்
தொழுகணவற்(கு) அணிமணமா லிகைசூட்டித்
தன்மகுடம் சூட்டிச் செல்வந்
தழைவுறுதன் அரசளித்த பெண்ணரசி
அடிக்கமலந் தலைமேல் வைப்பாம்.





அம்மன் விமானம்

ராஜா பிரஸ், மதுரை:—63